# மன்றம்

வார ஏடு

ஆசிரியர் : இரா. நெடுஞ்செழியன், எம். ஏ.

மலர் 6—இதழ் 5 ★ 2-6-57 சென்னை ★ விலை 16 காசு


# கொள்ளைக்கார

"போகாதே, நில்!" கடுமையான குரல் வருகிறது. காட்டு வழியில், இருட்டுகின்ற வேளையில், அந்தப் பயமுறுத்தல் வந்தால், குடும்பத்தினர் என்ன செய்வார்கள்? மிரண்டுபோய் நிற்கிறார்கள். சுற்றிலும் பார்த்தால் யாரையுங்காணோம். தயக்கத்துடன், தளர்ச்சியுடன், அச்சத்துடன், மேற்கொண்டு அடியெடுத்து வைக்க முற்பட்டால் "நில்! போகாதே!" என்று மீண்டும் குரல் வருகிறது.

செடியின் மறைவிலிருந்து ஒருவன் குதித்து, வழியை மறைத்து நிற்கிறான்!

முரட்டு உருவம், மிரட்டும் பார்வை! வழிப்பறிக் கொள்ளைக்காரன்! கொள்ளைக்காரன் என்பதை அவன் நின்ற கோலமே காட்டியது. ஒருகையில் நீண்டவேல், மற்றொருகையில் ஒரு பை!

காட்டுவழியில் கொள்ளைக்காரன் இருக்கிறானென்பதைக் கேள்விப்பட்டிருக்கிறார்கள். அவன் கொடுந்தன்மைக்கு ஆளாகி, தங்களது பொருள்களை பறிகொடுத்து,

"தலையில் என்ன அது?" வேலால் தலையில் இருந்த மூட்டையைத் தட்டிக் கொள்ளைக்காரன் கேட்டான்.

"சோற்று மூட்டை!"

"பொய், பொய்! எங்கே எடுத்துக் காட்டு!"

ஏழை மூட்டையைத் திறந்தான், தயிர்ச் சோறு கட்டியாக இருந்தது. சோற்றுக்குள் ஏதாவது இருக்குமோ என கொள்ளைக்காரன் தனது வேல் நுனியால் சோற்றைக் கிண்டினான், ஒன்றுமில்லை!

"வரட்டுப்பேய்!" கோபத்துடன் மூட்டையைக் காலால் உதைத்தான். சோறு மண்ணில் விழுந்து சிறறியது.

"ஐயோ! சோறு!" கணவனும் அவனது மனைவியும் சோற்றை அள்ளப்போனார்கள். "ஆ, ஆ!" என கொள்ளைக்காரன் சிரித்தான்.

அவன் கண்ணில் மனைவியின் கழுத்தில் மின்னிய பொன் தென்பட்டது.

"அது என்ன?"

# ஆட்சி!

...லர் அவதிப் பட்டதைக் கேட்டிருக்கிறார்கள். காட்டுவழியில் நடந்த கொள்ளைகள், கொலைகள், ஏமாற்றுதல்கள், மாறுவேடத்தில் உடன் வந்து செய்யும் வஞ்சகங்கள் இவைகளைப்பற்றி கதைகள் பலப்பல உண்டு. அந்த கொள்ளைக்காரன் கனத்த போர்வைகளைப்போர்த்திக்கொண்டு பெரிய மனிதன்போல சில சமயங்களில் உலவுவான், சிலசமயம் காவியுடை தரித்து கமண்டலமேந்தி சுற்றுவான், மற்றொரு சமயம் வியாபாரிபோல மூட்டை முடிச்சுகளுடன் வருவான். பகலிலே இவ்வளவு வேடங்களும், இரவு வந்தால் பழைய திருடக்கோலம்! காவியுடையில் இரத்தக்கறை படியும், கமண்டலம் தாங்கிய கரத்தில் வேல் இருக்கும், மூட்டையில் பறிக்கப்படும் பொருள்கள் மறையும்!

காட்டுவழி நின்ற கொள்ளைக்காரனைப் பற்றிக் கேள்விப்பட்டவர்கள், அவனைப்பற்றிய பலவித பயங்கர வர்ணனைகளைக் கேட்டிருந்த போதிலும் நேரில் பார்க்கும் பொழுதுதான் அவன் எப்படிப்பட்டவன் என்பது தெரிந்தது.

"ஐயோ!" கழுத்தை மூடிக்கொண்டாள் அவள்.

"நகையை எடு!" கொள்ளைக்காரன் அதட்டினான்.

"ஐயோ! ஒரேஒரு நகைதான் எங்கள் குடும்பத்திலேயே இருப்பது! விட்டுவிடுங்கள் வேறு என்ன வேண்டுமானாலும் தருகிறேன்" கணவன் கெஞ்சினான்.

"வேறு என்ன இருக்கிறது உங்களிடம்? அந்த நகைதான் எனக்கு வேண்டும்!"

"ஐயோ! என் தாலிகோர்த்த சரடு! விட்டுவிடுங்கள்!" மனைவி கொள்ளைக்காரனின் காலில் விழுந்து கெஞ்சினாள், கதறினாள்.

கொள்ளைக்காரன் சிரித்தான். "தங்கம் எனக்குத் தேவைப்படுகிறது, தாலிச்சரடு என்றாலும் என்னிடம் வந்துதானாகவேண்டும்!"

கொள்ளைக்காரன் நீண்டவேலை கழுத்தருகே கொண்டுபோனான், சங்கிலியுடன்

(2-ம் பக்கம்பார்க்க)

# இந்தியாவில் தற்குறித்தன்மை அதிகமாகிறது.

ஒருநாடு முன்னேறியிருக்கிறதென்றால், அந்தநாட்டின் வாழ்க்கைத்தரம் மட்டுமல்ல, அந்தநாட்டு மக்கள் எந்தஅளவு கல்வியறிவு பெற்றவர்களாக இருக்கிறார்கள் என்பதையுங் கவனிக்கவேண்டும். பெரும்பாலும் வாழ்க்கைத்தரம் உயர, மக்களுக்கு கல்வியறிவு உயரவேண்டிய அவசியம் உண்டாகும். கல்வியறிவு பெருகும்பொழுதுதான், ஆராய்ந்துபார்த்து முடிவெடுக்கும் திறன் மக்களுக்கு ஏற்பட்டு, அவர்களுடைய வாழ்வில் முக்கிய மாறுதல்கள் நிகழ்கின்றன.

"மக்களுடைய நல்வாழ்வுக்கான திட்டங்களினால் முழுப்பலன் கிடைக்கவேண்டுமானால், பொருளாதாரத் திட்டங்களைவிட முன்னதாகக் கல்வித் திட்டங்களுக்கு இடம் தரவேண்டும்." இவ்வாறு ஐந்தாண்டுத்திட்டக் குழுவினர் கல்வியறிவு பரவுவதன் அவசியத்தைப் பற்றிக் கூறியுள்ளனர்.

நாட்டின் முன்னேற்றம், கல்வித்துறை முன்னேற்றத்துடன் மிகவும் பின்னப்பட்டுள்ளது. கல்வித்துறை முன்னேற்றமே நாட்டின் பொதுவான முன்னேற்றத்துக்கு ஒரு அளவுகோல் என்று கூறலாம்.

விடுதலைபெற்ற இந்தியா காங்கிரசு ஆட்சியில் முன்னேறுகிற தென்றால், கல்வித் துறையில் எந்த அளவு முன்னேறியிருக்கிறது என்பதைப் பார்க்கவேண்டும்.

இந்தியாவில் 100க்கு 14 பேர்களுக்குத்தான் எழுதப் படிக்கத் தெரியும், பாக்கி 100க்கு 86 பேர்கள் தற்குறிகள்-கட்டைவிரலில் மை தடவி அழுத்தும் துர்பாக்கிய நிலையில் இருககிறவர்கள்.

இந்த நிலையில் காங்கிரசின் பத்தாண்டு ஆட்சிக்குப் பின் எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள் விகிதம். அதிகமாயிருக்கிறதா என்றால், இல்லை.

நாட்டில் எழுதப் படிக்கத் தெரிந்தோர் விகிதம் குறைந்து, தற்குறித்தன்மை அதிகமாகி வருகிறதாம்! இதை இந்திய அரசாங்கக் கல்விப் பகுதியில் புள்ளிவிவர ஆராய்ச்சியாளராக இருக்கும் டாக்டர் பி. பி. சமந்த் என்பவர் வெளியிட்டுள்ளார். 20-5-57ல் அலகாபாத்தில் நடைபெற்ற உத்தரப் பிரதேச கல்வி மாநாட்டில் பேசும்பொழுது அவர் குறிப்பிட்டார் :

"தற்குறித்தன்மைநாட்டில் அதிகரித்து வருகிறது. அதற்குக் காரணம் மக்கள் தொகை பெருகி வருகிற அளவுக்கு கல்விவசதிகள் செய்யப்படவில்லை!"

பள்ளிக் கூடங்கள், கல்லூரிகள் இவைகள் ஏராளமாகத் திறக்கப் பட்ட போதிலும், படிப்பவர்கள் தொகை அதிகமாகும் அளவைவிட, படிக்க வேண்டியவர்கள்—படிக்க முடியாதவர்கள் தொகை அதைவிட அதிகமாகிக் கொண்டே போகிறது. எனவே படித்தவர் விகிதம்—100க்கு எவ்வளவு பேர் என்ற கணக்குக் குறைந்து வருகிறது.

கல்வித்துறையில் இந்தியா முன்னேற்றமடைய வில்லை, பின்னேற்றமடைந்து வருகிறது.

சுற்றினன், ஒரு வெட்டுப் போட்டு இழுத்தான். தங்கச் சரடு அறுந்து கொள்ளைக்காரன் கையில் வந்து சேர்ந்தது!

கழுத்திலே இரத்தம் சொட்ட கண்களிலிருந்து கண்ணீர் சொட்ட, அந்த அபலை அழுது புலம்பினள் அவளுடைய கதறல், குழந்தையின் அழுகை வேறு எவரையும் மனமிளகச் செய்திருக்கும். ஆனால் கொள்ளைக்காரனே சிரித்துக்கொண்டு, சிங்காரப் பண்ணிசைத்துக் கொண்டு, தான் "சம்பாதித்த" தங்கத்தின் எடையைப் பார்த்து மகிழ்ந்த வண்ணம் போனன்!

காட்டுவழியில் எதிர்நின்று, வேலைக் காட்டிக் கொள்ளைக்காரன் அதட்டிக் கேட்கும் பொழுது, பலர் அஞ்சி தாம் வைத்திருக்கும் பொருள்களைக் கொடுத்து விடுவர்கள்! கேட்டவுடன் தராவிட்டால் படுகாயத்தை உண்டாக்கி, இரத்தத்தைச் சிந்தி, பொருளைக் கைப்பற்றிக்கொள்ள கொள்ளைக்காரன் தயங்கமாட்டான்!

காட்டிலே கொள்ளைக்காரன் இருப்பதைப்போல, நாட்டிலேயும் சில சமயங்களில் கொள்ளைக்காரர்கள் தோன்றிவிடுகிறர்கள், மக்களை ஆட்டிவைக்கிறர்கள், ஆட்சி செய்கிறர்கள்!

ஆட்சி செய்கிறவர்கள் அளவுக்கு மீறி வரியைப் போட்டால், கொள்ளையடிக்கிற கொள்ளைக்காரனைப் போலத்தான் ஆகிறர்கள்;

கொள்ளைக்காரன் "கொடு!" என்று வழிப்போக்கர்களின் பொருள்களைப் பறிக்கிறன், கொடுங்கோல் ஆட்சியாளர் "கொடு!" என்று மக்களிடமிருந்து பணத்தை வசூலித்துக் கொள்கிறர்கள்!

கொள்ளைக்காரன் பொருளைப் பிடுங்குவதை "வழிப்பறி!" என்கிறேம், கொடுங்கோல் ஆட்சியாளர் வசூலிப்பதை "வரிக் கொடுமை" என்று சொல்கிறேம்!

கொள்ளைக்காரன் வழிப்பறி செய்ய தனது வேலைக் காட்டி மிரட்டுகிறன்! ஆட்சியாளர் வரிக் கொடுமையை நிறைவேற்ற தமது சட்டத்தைக் காட்டி பயமுறுத்துகிறர்கள்!

"கொடுக்காவிட்டால் குத்துவேன்!" என்கிறன் கொள்ளைக்காரன். "கொடுக்காவிட்டால் தண்டிப்பேன்!" என்கிறன் கொடுங்கோல் ஆட்சியாளன்.

ஈட்டிக்குப் பயந்து மக்கள் கொள்ளைக்காரனிடம் பணத்தைக் கொடுத்துவிடுகிறர்கள்! அதைப்போல சட்டத்தின் தண்டனைக்குப் பயந்து மக்கள் கொடுங்கோல் ஆட்சியிடம் பணத்தைக் குவித்துச் செல்கிறர்கள்!

இந்தக் கருத்தை, நாமல்ல, திருவள்ளுவர் கூறியுள்ளார், தமது குறளில் கொடுங்கோன்மை என்ற அதிகாரத்தில்!

வேலொடு நின்ருன் இடுவென்
றதுபோலுங்
கோலொடு நின்ருன் இரவு.

# வருமான வரியில் அலங்கோல மாற்றங்கள்!

பெருவழியில் இடையில் தனியே வேலேந்தி நின்ற கொள்ளைக்காரன், அவ்வழியே செல்லும் வழிப்போக்கரைத் தடுத்து நிறுத்தி அவர் தம் கைப்பொருள்களையெல்லாம் கொடு என்று பயமுறுத்திக் கேட்பதை ஒக்கும், அச்சுறுத்தித் தண்டிக்கும் தன்மை வாய்ந்த சட்டத்தை ஏந்தி இருக்கும் ஆட்சியாளன் குடிமக்களிடம் வரிப்பொருள் கேட்பது."

நாட்டிலே மக்களை அஞ்சி நடுங்கச் செய்து, சட்டத்தின் துணையால்அச்சுறுத்திவசூலிக்கும் ஆட்சியாளர்களை "கொள்ளைக்காரர்கள்!" என்று தான் நாம் கூறவேண்டும்!

வழிப்பறிக் கொள்ளைக்காரன் சமூகத்துக்கு எவ்வளவு எதிரியோ, அவ்வளவு எதிரி அதிக வரிப்பணம் பறிக்கும் ஆட்சிக் கொள்ளைக்காரனும்!

அஞ்சி நடுங்கி, ஆற்ருது புலம்பி, மக்கள் பணத்தைக் கொடுத்தால், அது காட்டிலேயாயினும் நாட்டிலேயாயினும் சரி, வாங்குபவன் வேல்பிடித்த கொள்ளைக்காரனாயினும், கோல் தாங்கிய அரசனாயினும் சரி, இருவரும் தன்மையால் ஒன்ருகின்றனர்!

காட்டு வழியில் கொள்ளைக்காரர்கள் ஒடுக்கப்பட்டால் தான், வழிப்பயணம் செல்வோர் அமைதியாகச் செல்ல முடியும், ஆட்சியிலுள்ள "கொள்ளைக்காரர்கள்" விரட்டப்பட்டால் தான், குடி மக்கள் தமது வாழ்க்கைப் பயணத்தை செம்மையாக நடத்தமுடியும்!○

## குறைந்த வருமானத்துக்குப் புது வரிகள்.

இதற்குமுன் ஆண்டு ஒன்றுக்கு ரூ4200 க்கு மேற்பட்ட வருமானமுடையவர்களுக்குத் தான் வருமானவரி இருந்தது. அதற்குக் குறைந்தவர்களுக்கு வருமானவரி செலுத்த வேண்டியதில்லை. ஆனல் இந்த ஆண்டு கனம் கிருஷ்ணமாச்சாரி வரவு செலவுத் திட்டத்தின்படி, குறைந்த அளவு 4200 லிருந்து ரூ 3000க்குத் தாழ்த்தப் பட்டது. அதாவது இனி மேல் ரூ 3000க்குமேல் ஆண்டு வருமானம் உள்ளவர்கள் வருமானவரி செலுத்தியாகவேண்டும். இன்னும் தெளிவாகச் சொல்லவேண்டுமென்ருல், மாதம் ரூ 250லிருந்து ரூ 300 வரை சம்பாதிப்பவனுக்கு சென்ற ஆண்டு வருமானவரி கிடையாது, இந்த ஆண்டு வரி உண்டு.

காங்கிரசு அரசாங்கத்தின் வரவு-செலவுத் திட்டத்தில் முன் வரிசெலுத்தாத குறைந்த சம்பளங்களுக்கு வரி விதிக்கப்பட்டதே தவிர, அதிக வருமானம் உடையவர்களுக்கு வருமான வரி குறைக்கப்பட்டது! ரூ 2500 சம்பளகாரனுக்கு புதிதாக வரி விதிக்கப்பட்டது. ஆனல் அதேசமயம் ரூ 20,000 சம்பளகாரனுக்கும் வருமானவரி குறைக்கப்பட்டுவிட்டது!

கீழ்க்கண்ட பட்டியலில் பழைய வரி விகிதமும் புதிய வரி விகிதமும் சேர்க்கப்பட்டுள்ளன.

| ஆண்டுவருமானம். | பழைய வரி. | புதிய வரி. | குறைக்கப்பட்ட வரி. | |
|---|---|---|---|---|
| ரூ. 3,600 | முன்பு இல்லை. | ரூ. 18 | ரூ. 18 | கூட்டப்பட்டது |
| 5,000 | 94 | 60 | 34 | குறைக்கப்பட்டது |
| 10,000 | 508 | 457 | 49 | ,, |
| 20,000 | 2132 | 2058 | 74 | ,, |
| 50,000 | 17,620 | 16,233 | 1387 | ,, |
| 1,00,000 | 55,026 | 51,408 | 3618 | ,, |
| 1,50,000 | 98,667 | 89,908 | 8759 | ,, |
| 2,00,000 | 1,44,604 | 1,28,408 | 16,196 | ,, |
| 2,50,000 | 1,90,541 | 1,66,908 | 23,633 | ,, |

குறைந்த ஆண்டு வருமானக்காரனுக்கு வரி சேர்க்கப்பட்டது, ஆனல் சம்பாதித்த வருமானம அதிகமாக அதிகமாக வரி அதிகமாகவே குறைக்கப்படுகிறது!

அதிகமான சம்பாத்தியம் உள்ளவர்களுக்கு வரியைக் குறைத்தால், அந்த வகையில் ஆண்டு ஒன்றுக்கு 75 கோடி ரூபாய் வரி குறைந்து வருகிறது.

அதேசமயம் குறைந்த சம்பளக்காரனுக்கு வரி விதிப்பதால் 5 கோடி ரூபாய் அந்த வகையில் மட்டும் அரசாங்கத்துக்குக் கிடைக்கப்போகிறது.

அதிக வருமானக்காரர்களுக்கு வருமான வரியைக் குறைத்தபோதிலும், புதிதாகப் போடப் போகும் செலவு வரியின் மூலம் அதை ஈடுசெய்துவிடப் போவதாகக் கனம் கிருஷ்ண மாச்சாரியார் கூறுகிறர்! கையிலிருந்த களாக்காயை விட்டு, வரப்போகும் பலாக்காயை எதிர்பார்த்து நிற்கிறர்.

மற்ற வரி விதிப்புகளினல் குறைந்த சம்பளக்காரர்கள் அவதியுறப் போகிறர்கள். அத்துடன் வருமான வரியும் அவர்களை வருத்தப்போகிறது!

குறைந்த சம்பளக்காரர்களின் வரிவிதிப்புக்கு எதிர்ப்பு

(12-ம் பக்கம் பார்க்க)

## இன்றுள்ள ஆடம்பரம்!

இந்தியாவை வெள்ளையர்கள் ஆண்ட காலத்தில், மக்களின் வரிப்பணம் வீணுகச் செலவு செய்யப்படுவதைக் கண்டித்து பேசாத தேசியத் தலைவர்கள், எழுதாத பத்திரிக்கைகள் இல்லையென்று சொல்லலாம் வைசிராய்களின் ஆடம்பர வாழ்க்கையும், அவர்களைச் சுற்றிக் கூட்டப்பட்டிருந்த அரசாங்க அதிகாரிகளுக்கான செலவுகளும், மத்திய அரசாங்கச் செலவுகளும் மக்களுக்குச் சுட்டிக் காட்டப்பட்டன. தரித்திர நாராயணர்களிடம் வசூலிக்கப்படும் பணம், அதிகார வர்க்கத்தால் பாழாக்கப்படுவதாகக் காங்கிரசுக்காரர்கள் அன்று சொன்னர்கள். அந்த உண்மை நிலையை யாரும் மறுக்க வில்லை ஆனல் அன்று வெள்ளை அதிகார நிருவாகத்தைக் குறை சொன்னவர்கள் ஆட்சி பீடத்துக்கு வந்ததும், ஆடம்பரமோ செலவோ குறைந்திருக்கிறதா என்ருல் அது தான் இல்லை. பத்து மடங்குக்கு மேலாம் வளர்ந்துள்ளது.

**1939-40ல் வெள்ளையன் காலத்தில் மத்திய அரசாங்க நிர்வாகத்துக்கு 10 கோடி ரூபாய் செலவிடப்பட்டது. இப்பொழுது காங்கிரசு ஆட்சியில் மத்திய அரசாங்க நிர்வாகத்திற்கு 125 கோடி ரூபாய் செலவிடப்படுகிறது!**

அன்று ஒரு வைசிராயும், அவருக்கு உதவியாக 6 ஆலோசகர்களும் நிர்வாகத்தை நடத்திஞர்கள் இன்று ஒரு குடியரசுத் தலைவர், ஒரு உபதலைவர், 39 மந்திரிகள், அவர்களுக்கு உதவியாக ஏராளமான பரிவாரங்கள் எல்லாம் இருக்கின்றன. அன்று இருந்ததை விட நிலப் பரப்பும், மக்கள் தொகையும் இன்று குறைவு என்பது குறிப்பிடத்தக்கது!



மன்றம்
ஞாயிறு 2—6—57 சென்னை

# "பஞ்ச" சீலம்

"ஏழையென்றும் அடிமையென்றும் எவனுமில்லை," எனக் காங்கிரசு இயக்கம் முழக்கமிட்டது, இன்று அல்ல, அன்று-சுதந்தரப் போராட்ட நாட்களில்! வெள்ளை ஏகாதிபத்தியத்தை எதிர்த்து, விடுதலை வேட்கையுடன் போராட்டங்களை நிகழ்த்தியபொழுது, வருங்காலத்தைப் பற்றி நினைத்த கவிகள் அவ்வாறு கனவு கண்டனர். சுதந்தரம் என்ருலே, பஞ்சம் நீங்கும், பட்டினி தொலையும், பணக்காரனின் ஆதிக்கம் அழியும், ஏழை நிமிர்ந்து நடப்பான் என்று தான் சுதந்திரப் போராட்ட நாட்களில் காங்கிரசுக்காரர்கள்-அத்தகைய காங்கிரசுக் காரர்கள் ஒரு சிலர் இன்றும் இருக்கத்தான் செய்கிறர்கள்-நினைத்தார்கள்.

இந்தியாவுக்கு விடுதலை கிடைத்தது. சுதந்தர இந்தியாவைப் பற்றி பலவித நம்பிக்கைகளை நாட்டுக்குத் தந்த காங்கிரசு இயக்கம் ஆட்சிபீடத்தைப் பிடித்தது. ஆனல் சுதந்தரத்துக்காகப் போராடிய காங்கிரசுக்கும் சுதந்தரத்துடன் ஆட்சிபுரியும் காங்கிரசுக்கும் அதிக வேறுபாடு இருக்கிறது. போராட்ட காலத்தில் தரப்பட்ட நம்பிக்கைகள், உண்டாக்கப்பட்ட உற்சாகங்கள், எழுப்பப்பட்ட இதயக் கனவுகள்-எல்லாம் சுதந்தர இந்தியாவில் மறக்கப்பட்டன. காங்கிரசின் பத்தாண்டு ஆட்சிக்குப் பின்னும் பஞ்சம் நீங்கவில்லை, பட்டினி தொலைய வில்லை. "நமது சர்க்கார் ஏற்பட்டதும், ஏழையென்றும் அடிமையென்றும் எவனும் இருக்கமாட்டான். இழிவு என்பது இந்தியாவை விட்டே ஓடிவிடும். எல்லோரும் சரி நிகர் சமானமாக வாழ்வார்கள்" எனக் கவிஞர்கள் கண்ட கனவு பொய்த்து விட்டது. ஏழை ஏழையாகவே இருக்கிறன், அடிமையின் இழிவு அகலவில்லை, "சரிநிகர் சமானமாக" என்ற சொற்கள் அரசியல் சட்டப் புத்தகத்தை அலங்கரிக்கின்றனவே அன்றி, நாட்டு நிலைமையைக் குறிப்பதாக இல்லை.

அன்று ஆடம்பரத்துக்கு இருந்த "சுதந்தரம்" முதலாளிக்கு இருந்த "சுதந்தரம்," பதவிப் பித்தர்களுக்கும் பணப் பெட்டியினருக்கும் இருந்த "சுதந்தரம்," கள்ள மார்க்கட்காரர்களுக்கும் கொள்ளை லாபக்காரர்களுக்கும் இருந்த "சுதந்தரம்"-இந்த "சுதந்தரங்கள்" சுதந்தர இந்தியாவில் வளர்ந்துள்ளன. காங்கிரசு அரசாங்கம் அத்தகைய "சுதந்தரங்களை" ஒளிவு மறைவு இன்றி, ஆதரித்து வளர்த்து வருகிறது.

எந்தத் "தரித்திர நாராயணனுக்காக" காந்தியார் பாடுபட்டாரோ, அந்த தரித்திர நாராயணனைக் கவனிப்பாரில்லை, அவன் இன்னும் தவித்தபடி இருக்கிறன். காங்கிரசு ஆட்சியில் அவனுடைய ஏழ்மை அதிகரித்தபடி-தான் இருக்கிறது.

காங்கிரசின் பத்தாண்டு கோலாகல ஆட்சிக்குப்பின், காங்கிரசின் குதுகலமான ஆவடித் தீர்மானங்களுக்குப்பின், காங்கிரசு அரசாங்கத்தின் முதல் ஐந்தாண்டுத் திட்டம் நிறைவேற்றப்பட்டபின், நாட்டில் வறுமை தரும் வாட்டம் நீங்கவில்லை, ஏழைக்கு இம்மியளவு கூட ஏற்றம் கிடைக்கவில்லை. மாருகக் காங்கிரசின் பத்தாண்டு ஆட்சிக்குப் பின், ஏழைகள் இன்னும் அதிக ஏழைகளாகியுள்ளனர், பணக்காரர்கள் இன்னும் பெரியபணக்காரர்களாகியுள்ளனர். இந்தப் பத்தாண்டு ஆட்சியில், பணக்காரனுக்கும் ஏழைக்கும் இடையிலிருந்த ஏற்றத் தாழ்வு அதிகமாயிருக்கிறது. சமதர்ம ஆட்சியென்ருல், ஏழைக்கும் பணக்காரனுக்கும் இடையிலுள்ள பேதம் நீங்கும், ஏற்றத் தாழ்வு குறையும். ஆனல் காங்கிரசு வகுத்துள்ள "சமதர்ம ஆட்சியில்" ஏற்றத்தாழ்வு அதிகமாகி வருகிறது. இந்தக் கருத்தை எதிர்க்கட்சியினரோ, மாறுபட்ட கொள்கையினரோ கூறுகின்றனரென்ருல் ஒரு அரசியல் பகைமையால் கூறுவதாகச் சொல்லக்கூடும். இந்தக் கருத்தை காங்கிரசுக் கட்சியைச் சார்ந்தவரும் காங்கிரசுக் கட்சியில் மிக முக்கியமானதொரு இடத்தில் இருப்பவருமான சீமன் நாராயண் அவர்களே கூறியுள்ளார். சீமன்நாராயண் அவர்கள் காங்கிரசின் பொதுக்காரியதரிசி ஆவார். அந்தப் பெரியவரே, "எக்னமிக் ரிவியு" என்ற காங்கிரசுக் கட்சியின் அதிகார பூர்வமான ஏட்டில் "கிடைத்துள்ள புள்ளி விவரங்கள் அனைத்தையும் சேர்த்துவைத்து பார்த்தாலும், அவையெல்லாம் ஏழைகளின் வாழ்க்கைத் தரத்துக்கும் பணக்காரர்களின் வாழ்க்கைத் தரத்துக்கும் உள்ள வேறுபாடு கடந்த ஒன்பது பத்து ஆண்டுகளில் குறைவதற்குப் பதிலாக அதிகமாகி இருப்பதைத்தான் காட்டுகின்றன!" என எழுதியுள்ளார். காங்கிரசின் பத்தாண்டு பரிபாலனத்தில் நாட்டின் பொருளாதார நிலை, காங்கிரசின் பொதுக்காரியதரிசியே காங்கிரசின் அதிகாரபூர்வமான ஏட்டில் ஒப்புக் கொள்ளவேண்டிய அளவு, சீர்கேடடைந்துள்ளது.

"சரிநிகர் சமானமாக வாழ்வமிந்த நாட்டிலே!" என்று போராட்டக் காலங்களில் எழுப்பப்பட்ட குரல் மறக்கப்பட்டுவிட்டது. "பொருளாதார ஏற்றத்தாழ்வுகளைச் சமன் செய்து, சமதர்ம மாதிரியில் நாட்டைக் கொண்டுபோவதே எங்கள் குறிக்கோள்!" எனத் தேர்தல் காலத்தில் தரப்பட்ட வாக்குறுதி புறக்கணிக்கப்பட்டுவிட்டது. ஒரு புறம் "சமதர்மம், சரிநிகர் சமானம்" என்ற பேச்சுக்கள், மற்ருெரு புறம் ஏழையை அதிக ஏழ்மையில் வாட்டும் வரவு செலவுத் திட்டங்கள்!

பண்டிதநேரு பாருக்கெல்லாம் பஞ்ச சீலத்தைப்பற்றி உபதேசிக்கிறர். ஆனல் இந்தியாவின் நான்குபக்கத்திலும் பஞ்சத்தின் சீலம் பரவுவதை கவனிக்க அவர் மறுக்கிறர். பஞ்சசீலம் உலகுக்கு, பஞ்சத்தின் கோலம் இந்தியாவுக்கு. பத்தாண்டு ஆட்சியின் பலன் இதுதான்!

# அந்தோ பிரிந்தார் தாளமுத்து!

தூத்துக்குடி நகரில் நீண்ட காலமாக தணியா ஆர்வமும், நீங்காப் பற்றும் கொண்டு இயக்கப் பணி ஆற்றிவந்தவரும் தொழிற்சங்கங்களுக்குத் தலைமை தாங்கி அவற்றைத் திறம்பட நடத்தி வந்தவரும், மறைந்த மாவீரர் கே. வி. கே. சாமி அவர்கள் விட்ட பணிகளைத் தொடர்ந்து ஆற்றி வருவதில் மிக்க ஆர்வங்காட்டி வந்தவரும், பொதுத் தொண்டிலேயே காலம் முழுவதும் கடத்தி வந்தவரும் ஆன தோழர் தாளமுத்து அவர்கள் இழிதகைமைகொண்ட கயவர்களால் படுகொலை செய்யப்பட்டார் என்ற துக்கச் செய்தி கேட்டுத் திடுக்கிட்டோம், திகைப்புற்றேம், ஆற்றெணுத் துயருற்றேம். விலங்குணர்ச்சிகொண்டமாக்களின் குருதிப் பசியைத் தோழர் கே. வி. கே. சாமி அவர்களின் படுகொலையே இறுதியாகத் தீர்க்கும் என்று எதிர்பார்த்தோம். ஆனல் அவர்களின் பசி இன்னமும் தீர்ந்த பாடில்லை. இன்னமும் எவ்வளவு பேர்களைக் காவுகொள்ள அந்தப் பசி காத்திருக்கிறதோ, தெரியவில்லை! அருமை ஆற்றல் வீரரை இழந்து வருந்தும் கழகத்தோழர்களுக்கும், கழக ஆதரவாளர்களுக்கும், அன்னரின் உற்ருர் உறவினர் நண்பர்க்கும் எம் ஆழ்ந்த இரக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேம். நீதியை நிலை நாட்ட அரசினர் முயலுவார்களாக! அமைதியை நிலைநாட்ட கழகத்தோழர்கள் முயலுவார்களாக! வாழ்க தாளமுத்து அவர்களின் பெயரும், புகழும்!

# வினவும் விளக்கமும்

அண்ணா

**வினு: சாதி ஒழிப்புக் கொள்கை திராவிட முன்னேற்றக் கழகத்திற்கு உடன்பாடான ஒன்று என்ருல், பெரியார் அவர்கள் துவங்கியுள்ள 'பிராமணுள்' அழிப்புப் போராட்டத்தில் ஏன் தி. மு. கழகம் கலந்து கொள்ளவில்லை?**

விளக்கம்: திராவிடர்க் கழகமும், திராவிட முன்னேற்றக் கழகமும் துவக்ககாலத்தில் மூலக் கொள்கைகளில் ஒரே தன்மையுடையனவாகக் காணப்பட்டாலும், அவற்றை நிறைவேற்றி வைக்கும் வகையிலும், அவற்றிற்கான திட்டங்கள் தீட்டும் வகையிலும், அவற்றைச் செயற்படுத்தும் முறைகளிலும், அவற்றை அணுகும் கண்ணேட்டத்திலும் தனித்தனித் தன்மை பூண்டன என்பது ஆழ்ந்து கவனிப்போர்க்குத் தெரியவரும். திராவிட முன்னேற்றக் கழகம் சனநாயக முறையில், கட்டுக் கோப்போடு நடமை-கண்ணியம்-கட்டுப்பாடு ஆகிய பண்புகளை மேற்கொண்டு வளர்ந்து வருகிறது. ஆனல் திராவிடக் கழகம் பெரியார் இராமசாமி அவர்களின் சர்வாதிகாரப் போக்கின் படி அவர் விரும்பியபோது அவர் விரும்பிய வாறெல்லாம் நடந்து வரும் கழகமாகும். தேர்ந்தெடுக்கப் பட்ட பிரதிநிதிகள் அடங்கிய பொதுக் குழுவே சனநாயக அடிப்படையில் தி. மு. கழகத்தை இயக்கி வருகிறது. பெரியார் சொன்னுல் அதுவே சட்டம். பெரியாரால் பிள்ளையாரை உடைக்கச் சொல்லவும் முடியும், பிள்ளையாருக்குப் பூசை நடத்துவதாக உயர் நீதி மன்றத்தில் தீர்ப்பு வாங்கவும் முடியும்; யூனியன் கொடியை எரிக்கச் சொல்லவும் முடியும், திடீரென்று நிறுத்தச் சொல்லவும் முடியும்; பாப்பனர்களைக் கத்தியால் குத்தி விரட்டியடிக்கச் சொல்லவும் முடியும், தேர்தலில் பாப்பனக் காங்கிரசு அபேட்சகர்களை ஆதரிக்கச் சொல்லவும் முடியும் ஆச்சாரியார் நல்லவர், யோக்கியர், புத்திசாலி, அவரேதான இன்னும் பத்து ஆண்டு காலத்திற்கு ஆளவேண்டும் என்று கூறவும் முடியும், ஆச்சாரியாரையும் அவரது குழுவினரையும் அழித்தொழிப்பது தான் தம் வேலை என்று கூறவும் முடியும்; வடநாட்டான் ஆதிக்கம் கூடாது என்பதற்காக வடநாட்டான் கடையின் முன் மறியல் நடத்தவும் முடியும், நூல் கிடைத்து விட்டது ஆகவே மறியல் வேண்டாம் என்று வேறு காரணம் சொல்லி மறியலை நிறுத்தி விடவும் முடியும்; பார்ப்பனர்களை அல்ல பார்ப்பனியத்தைத் தான் ஒழிக்கப்போகிருேம் என்று சொல்லவும் முடியும், பார்ப்பனர்களை விரட்டியடித்துக் குத்திக் கொலை செய்யப் போகிருேம் என்று சொல்லவும் முடியும்; வாரிசு எடுப்பது என்பது மூட நம்பிக்கைகளிலே ஒன்று என்று கூறவும் முடியும், தாமே மணியம்மையாரை வாரிசாக எடுத்துக் கொள்ளவும் முடியும்; கிழவனும் குமரியும் திருமணம் செய்து கொள்வதைப் பொருந்தாத் திருமணம் என்று சொல்லித் தாமே மணியம்மையாரைத் திருமணம் செய்து கொள்ளவும் முடியும்; காங்கிரசுக் காமராசரை முதல் பொதுத்தேர்தலில் எதிர்க்கவும் முடியும், இரண்டாவது பொதுத் தேர்தலில் ஓடோடிப் போய் ஆதரிக்கவும் முடியும்! இப்படிப்பட்ட அரசியல் வாண வேடிக்கைகளைப் பெரியாராலும், அவரது கழகத்தாலுந்தான் செய்து காட்ட முடியுமே ஒழிய, திராவிட முன்னேற்றக் கழகத்தால் செய்துகாட்டமுடியாது! இப்பொழுது பெரியாரால் துவக்கப்பட்டிருக்கும் 'பிராமணுள்' ஒழிப்புப் போராட்டம் என்ன என்ன உருவெடுக்குமோ, எங்கு எங்கு போய் நிற்குமோ, எப்படி முடியுமோ, அதனை யாரும் அறிந்து கொள்ள முடியாது. என்ன முடிவு எடுக்கப் போகிருர் என்பது அவருக்கே தெரியாது என்ருலும் அதில் வியப்படைவதற்கில்லை.

இரண்டு கழகங்களும் சனநாயக முறைப்படி கூடிக்கலந்து பேசி, சனநாயக முறைப்படி முடிவு எடுத்துப் போராட்டம் துவக்கப்பட்டிருந்து, அதில் திராவிட முன்னேற்றக் கழகம் கலக்காமலிருந்திருந்தால் ஏன் கலந்து கொள்ளவில்லை, என்று கேட்பதிலே பொருளிருக்கமுடியும். ஒருகழகம் தன் விருப்பப்படி போராட்டத்தைத்துவங்கும், தன் விருப்பப்படி நடத்தும், தன் விருப்பப்படி நிறுத்தும், அதன் பின்னுல் மற்ருெரு அரசியல் கழகம் கண்ணை மூடிக்கொண்டு ஓட வேண்டும் என்ருல், அது எப்படி சனநாயகப் பண்பாகும். அது, பிறரிடம் இரந்துண்ணும்பக்கிரியின் போக்குக்குழப் பாகுமேயல்லாமல், பண்புள்ளவன செய்யும் செயல் ஆகாது.

திராவிட முன்னேற்றக் கழகம் நடத்திய எந்த போராட்டத்திலும் திராவிடக் கழகம் கலந்து கொண்டதில்லை. மாருகத் தி. மு. க. போராட்டங்களை இழித்தும், பழித்தும், எதிர்த்தும் கூறிவந்திருக்கிறது. ஆனல் திராவிட முன்னேற்றக் கழகம் சனநாயக முறை கருதி திராவிடக் கழகப் போராட்டங்களில் கலந்து கொள்ளவில்லையே தவிர, போற்ற வேண்டியவைகளைப் போற்றி, புறக்கணிக்க வேண்டியவைகளைப் புறக்கணித்தும் வந்திருக்கிறது ஆனல் திராவிடக் கழகப் போராட்டங்களை எதிர்த்து நின்று தொல்லை கொடுத்தது இல்லை; அதன் போக்கிலேயேதான் அது விடப்பட்டது.

எனவே கூடிக்கலந்து பேசாத, முடிவெடுக்காத எல்லா வகையிலும் ஒத்து வாராத ஒரு அரசியல் கட்சி நடத்தும் போராட்டத்தில், மற்ருெரு அரசியல் கட்சி தானகவே கலந்து கொள்ளும் என்று எதிர்பார்ப்பதும், கலந்துகொள்ள வேண்டும் என்று வற்புறுத்துவதும் பொருத்த மற்றவையாகும்.

சாதி ஒழிய வேண்டும் என்பதிலே திராவிட முன்னேற்றக் கழகம் உறுதியான நம்பிக்கைத்தான் கொண்டிருக்கிறது. சாதி ஒழிய சாதித் தன்மைகளை விடுதல், சாதிச் சின்னங்களை அகற்றுதல், தாழ்ந்துபோனவர்களை அரசியல்-பொருளாதார-சமுகத் துறைகளில் உயர்த்தி உயர்ந்தசாதி-தாழ்ந்த சாதி என்ற ஏற்றத்தாழ்வுகளைப் போக்குதல், சாதிப் பெயர்களைக் குறிப்பிடாமலிருத்தல், கலப்புத் திருமணங்களை ஆதரித்தல், சாதி ஒழிப்புக்கான சூழ்நிலையை உருவாக்கும் கருத்துக்களைச் சொற்பொழிவுகள், கட்டுரைகள், கதைகள், நாடகங்கள், பேசும் படங்கள் ஆகியவற்றின் மூலம் பரப்புதல், தமிழகத்திலுள்ள அனைவரையும் மொழியால் தமிழர், தேசிய இனத்தால் திராவிடர் என்று சாதிபேதமற்றுக் கருதச் செய்தல் போன்ற அரும் பணிகளைத் தி. மு. கழகம் ஆற்றிவருகிறது. சாதிப் பெயரைக் குறிப்பிடாமலிருத்தல் என்ற பணியை ஓட்டல்களைப் பொறுத்துச் செய்து முடிக்கவே திராவிடக்கழகம் போராட்டம் துவங்கியிருக்கிறது.

'பிராமணுள் ஓட்டல்' 'நாடார் ஓட்டல்' 'செட்டியார் ஓட்டல்' 'பிள்ளைமார் ஓட்டல்,' 'முசுலிம் ஓட்டல்', 'இந்து ஓட்டல்' போன்று சாதி-மத அடிப்படையில் ஓட்டல்கள் காணப்படக் கூடாது என்பது தான் திராவிட முன்னேற்றக் கழகத்தின் குறிக்கோளாகும் இந்தக் குறிக்கோள் இன்றைய மதச்சார்பற்ற அரசினர்க்கும் உடன்பாடுற்ற ஒன்றேயாகும். எனவே இந்தக் குறிக்கோளைச் சட்டத்தின் மூலம் நிறைவேற்றிவைக்குமாறு அரசியலாரைத் தூண்டுவதும், வற்புறுத்துவதும் ஓரளவுக்கு எளிமையாகவும், முறையாகவும் நடைபெறக்கூடிய செயல்களாக இருக்கக்கூடும். சென்னைக் காங்கிரசு அரசினர்க்கு நெருங்கிய நண்பராகவும், ஆதரவாளராகவும் விளங்கும் பெரியார் இராமசாமி அவர்கள் சட்டத்தின்மூலம் இந்தக் குறிக்கோளை நிறைவேற்றிவைக்க முயலுவாரேயானல், அது மிக்க எளிமையாக முடிந்தாலும் முடியக்கூடும். அதை விட்டு விட்டு இப்பொழுது திடீர்ப் பேராட்டத்தில் பெரியார் அவர்கள் ஈடுபட்டிருப்பதற்குக் காரணம் தேர்தல் காலத்தில் இழந்த செல்வாக்கைப் பெறுவதற்கும், சிதறுண்ட திராவிடக்கழகத் தோழர்களை ஒன்று சேர்ப்பதற்குமே ஆகும் என்று சிலர் ஐயப்படுவதில் பொருள் இருக்கக்கூடுமோ என்று எண்ணவேண்டியிருக்கிறது.

இந்தப் போராட்டத்தின் விளைவாகச் சிலர் 'பிராமணுள்' என்றசொல்லை ஓட்டல் பெயர்ப் பலகையினின்றும் நீக்கிவிட்டார்கள் என்ருல், அந்த அளவுக்கு நாமும் மகிழ்ச்சி கொள்ளத்தான் செய்கிருேம்.

சாதி ஒழிப்பை இந்த வகையில் நிறைவேற்றி வைக்கிற பணியைத் திராவிடக்கழகம் எடுத்துக் கொள்ளட்டும் என்ற முறையில் தான், அந்தப் பணியை அதனிடம் விட்டு விட்டு வேறுவகையான பணிகளில் திராவிட முன்னேற்றக் கழகம் வழக்கம்போல் தன் கவனத்தைச் செலுத்திக் கொண்டுவருகிறது.

இந்தப் போராட்டத்தில் தி. மு. கழகம் கலந்துகொள்ளாததற்கு வேறோர் முக்கிய காரணமும் உண்டு. திராவிட முன்னேற்றக் கழகம் ஈடுபட்டால், அந்தக் காரணம் கொண்டே போராட்டம் கெட்டுப்போய்விட்டது என்று எங்கேப் பெரியார் இராமசாமி அவர்களும், திராவிடக் கழகத்தினரும் கூறிவிடுவார்களோ, அதனல் போராட்டத்தை நிறுத்திவிடுவார்களோ என்ற கருத்தினுலும் தி. மு. கழகம் இந்தப்போராட்டத்தில் ஈடுபடுவதற்கில்லை.

திராவிட முன்னேற்றக்கழகம் முறையான காலத்தில், இன்றியமையாத சூழ்நிலையில், முறையான நடவடிக்கைகளை, முறைப்படி மேற்கொள்ளும். திராவிட முன்னேற்றக்கழகம் கிளர்ச்சியைத்தேடி அலையாது, தேடிவரும் கிளர்ச்சியை விட்டு ஒடி ஒளிந்து விடாது!

சாதி ஒழிப்புக் கொள்கை தி. மு. கழகத்திற்கு உடன்பாடானதுதான்; ஆனல் பெரியாரின் முறைகள் உடன்பட்டு வருபவையல்ல!

—இரா. நெ.



# மக்களுக்காகத் திட்டமா?

அக்கிரகாரத் திண்ணையின்,

தலைக்காகக் குல்லாயா? அல்லது குல்லாய்க்காகத் தலையா? என்று வேடிக்கையாகக் கேட்பார்கள். தலையின் அளவை எடுத்து, அதற்குத் தகுந்த அளவுடன் கூடிய குல்லாயைத் தந்தால் அதை அணிந்து கொள்ள முடியும். அதை விட்டு, குல்லாயைச் செய்துவிட்டு, அது பிடிக்காத தலையை எப்படியாவது உள்ளே அழுத்திவிட வேண்டுமென்ருல், முடியாத காரியம். அப்படிப்பட்ட காரியத்தைச் செய்ய காங்கிரசு அரசாங்கம் முயலுகிறது. ஐந்தாண்டு அளவுள்ள ஒரு திட்டத்தை அது செய்து வைத்து, அதை எப்படியாவது இந்தியாவின் தலையில் போட்டுவிடப்பார்க்கிறது. கொஞ்சம் யூகம் உள்ளவர்கள், "குல்லாய் அளவு-திட்டத்தின் கால அளவு குறைவாக இருக்கிறது. கொஞ்சம் (கால) அளவைப் பெரிது படுத்துங்கள், அப்பொழுது வேண்டுமானல் போட்டு விடலாம்!" என்று கூறுகிருர்கள். ஆனல் பிடிவாதக்காரர்கள் "குல்லாய் அளவைப் பெரிதாக்க முடியாது, தலையை வேண்டுமானல் அங்கு மிங்கும் வெட்டி, குல்லாயின் அளவுக்குக் கொண்டு வந்துவிடுகிருேம்!" என்று கூறுகிருர்கள், குல்லாய் அளவுக்குத் தலையைத் திருத்த முற்பட்டால், குல்லாய் மிஞ்சும், அணியவேண்டிய ஆள் இருக்க மாட்டான். அதைப் போல ஐந்தாண்டுத் திட்டத்தை உண்டாக்கி அதை எப்படியாவது நிறைவேற்ற வேண்டுமென்ற பிடிவாதத்தில் மக்கள் வாழ்க்கைத்தரத்தை-வாழ்வை "வெட்ட" ஆரம்பித்துள்ளது அரசாங்கம். அப்படி வெட்டினல், ஐந்தாண்டுத் திட்டமென்ற குல்லாயைப் போட, மக்களின் வாழ்வு குறைக்கப்பட்டு சிதைக்கப்பட்டால், ஐந்தாண்டுத் திட்டம் மிஞ்சும், திட்டத்துக்கான மக்கள் இருக்கமாட்டார்கள்.

புதிய வரவு செலவுத்திட்டத்தில் வரிச்சுமை அளவுக்கு மீறி அதிகரித்துள்ளது. வரிச்சுமை அதிகரித்துள்ளதற்கு முக்கிய காரணமாக ஐந்தாண்டுத் திட்டத்தை நிதி மந்திரி கனம் டி. டி. கிருஷ்ணமாச்சாரியார் காட்டுகிருர். ஐந்தாண்டுத் திட்டத்தை நிறைவேற்ற வேண்டுமானல் வரி உயர்வு தவிர்க்க முடியாதது என நேரு பண்டிதரும் அதற்கு ஒத்துப் பேசுகிருர்.

தேர்தல் காலத்தில் ஐந்தாண்டுத் திட்டங்களின் அருமைபெருமைகளைப் பற்றி வர்ணித்தார்களே அன்றி, அதை நிறைவேற்ற பொது மக்களின் மீது புதுவரிகள் போடப்படும் என்பதை விளக்கமாகக் கூறவில்லை. காங்கிரசின் தேர்தல் அறிக்கையில் கூட "ஐந்தாண்டுத் திட்டத்தை நிறைவேற்றும் பளு, முக்கியமாக அதை தாங்கக்கூடிய வகையில் வசதி அதிகமாக உள்ளவர்கள்மீது தான் போடப்படும்" என்று தான் கூறப்பட்டது. ஆனல் தேர்தல் முடிந்து கூடுகின்ற முதல் மக்கள் சபைக் கூட்டத்தில், புது வரிகள், ஒன்று இரண்டல்ல 112 வரிகள் போடப்படுகின்றன. திட்டம்நிறைவேறவேண்டுமென்று ஆண்டு ஒன்றுக்கு 100 கோடிகளுக்கு மேல் தரவல்ல-மக்களிடமிருந்து அரித்துப் பிடுங்கவல்ல வரிகளைப் போட்டுள்ளார்கள். தேர்தல் அறிக்கையில் கூறப்பட்ட படி, "தாங்குவதற்கு அதிக வசதியுள்ளவர்கள் மீது" வரிச்சுமை விழவில்லை. 100 கோடியில் 75 கோடிக்கு மேலாக பொது மக்கள் தலையில் - ஏழை பாழைகள் மீது விழுகிறது, போடப்பட்ட 112வரிகளில் 106 வரிகள் பொதுமக்கள் மீது நேரடியாக விழுந்துள்ளன. தேர்தல் அறிக்கையில் மக்களுக்குத் தரப்பட்ட வாக்குறுதி மறக்கப்பட்டு, ஏழை மேலும் ஏழையாகும் விதத்தில் வரிகள் போடப்பட்டுள்ளன. ஓட்டுக் கேட்ட காலத்தில் காங்கிரசு உண்மையை அறிவித்து, வரப்போகும் வரிச்சுமையைப் பற்றிக் குறிப்பிட்டிருந்தால் தேர்தல் முடிவுகள் வேறு விதமாக அமைந்திருக்கும். ஆனல் நேர்மையற்ற முறையில், ஜனநாயகத்துக்குப் புறம்பான விதத்தில், தேர்தல் அறிக்கையில் ஒன்றைச் சொல்லி தேர்தலுக்குப் பின் ஆட்சி பீடத்தில் அமர்ந்ததும் வேருெரு முறையைக் காங்கிரசுக் கையாளுகிறது. இந்த வரிவிதிப்புகளுக்கு மக்களின் அனுமதியை-ஆதரவை காங்கிரசு ஜனநாயக முறையில் பெறவில்லை.

ஐந்தாண்டுத் திட்டமென்ருல், தேர்தல் காலத்தில் அதைத் தனது கட்சியின் திட்டம்போல மக்களுக்கு எடுத்துச் சொல்லியது. ஐந்தாண்டுத் திட்டமென்பது, காங்கிரசுக் கட்சியின் திட்டமா? அல்லது காங்கிரசு அரசாங்கத்தின் திட்டமா? அல்லது இந்தியா முழுவதற்கும் பொதுவான தேசியத் திட்டமா? இத்தகைய கேள்விகள் திட்டத்தைப் பற்றி எழுகின்றன. திட்டம் வளர்ச்சியடைந்தால், அதன் வளர்ச்சிக்குத் தாங்கள் தாம் காரணமென காங்கிரசும், அரசாங்கக் கட்சியும் கூறும். ஆனல் திட்டம் தோல்வியடைந்தால் - இப்பொழு[...] போகிற போக்கில் தோல்வியைநோக்கி திட்டம் வேகமாகச் சரிந்து கொண்டிருக்கிறது. அத்தகைய தோல்விவந்தால்-இப்பொழுது முன்னல் நிற்பவர்கள் பின்னல் சென்று விடுவார்கள். காங்கிரசுக் கட்சி, காங்கிரசு அரசாங்கக் கட்சியின் மீது குற்றஞ் சாட்டும். காங்கிரசு சட்ட சபை மக்கள் சபை அங்கத்தினர்கள் காங்கிரசு அரசாங்கத்தின் மீது குற்றஞ் சாட்டுவார்கள். இவ்வாறு பொறுப்பேற்க எவரும் முன்வர மாட்டார்கள்.

இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களைப்பற்றியும் கவனிக்கும்பொழுது, திட்டங்களின் பெயரால் மக்களின் வரிப்பணம் எவ்வளவு வீணுக்கப் பட்டது, போடப்பட்ட திட்டங்கள் எந்த அளவுக்கு எதிர்பார்த்த பலன்களைத் தந்துள்ளன, கிடைத்த பலன்கள் எந்த அளவு பொது மக்களுக்கு-ஏழைகளுக்கு உதவியிருக்கிறது, இவைகளையெல்லாம் நன்ருக ஆராய்ந்த பின்தான் மேலும் இவர்கள் போடும் பெரும் திட்டங்களுக்கு பணம் ஒதுக்குவதை ஒத்து[...]

# திட்டத்துக்காக மக்களா?

கனம் டி. டி. கிருஷ்ணமாச்சாரியாரின் புதிய வரவு-செலவுத் திட்டத்தில் மொத்தம் 112 புதிய வரி விகிதங்கள் போடப்பட்டுள்ளன. அவற்றில் 90 வரிகள் சுங்கப் பொருள்களின்மீது, அதாவது ஏற்றுமதி-இறக்குமதி பொருள்களின்மீது ஆகும். அவற்றில் முக்கியமான சில மட்டும் கீழே காட்டப்பட்டுள்ளன.

| வரிப் பொருள். | முன்னைய வரி. | புதிய வரி. |
|---|---|---|
| 1. ஏலம், மிளகு, இஞ்சி போன்ற வாசனைச் சாமான்கள். | | |
| —உயர்ந்த ரகம் | 65 சதவீதம் | 82½ சதவீதம் |
| —சாதாரண ரகம் | 57½ ,, | 75 ,, |
| 2. சாயத் தொழில்-தோல் பதனிடும் சாமான்கள் | முன்பு வரியில்லை | 10 ,, |
| 3. கோந்து, பிசின் சரக்குகள் | முன்பு வரியில்லை | 10 ,, |
| 4. கந்தகம் | முன்பு வரியில்லை | 5 ,, |
| 5. பென்சிலின் | | |
| —உயர்ந்த ரகம் | 20 சதவீதம் | 26 ,, |
| —சாதாரண ரகம் | 14 ,, | 20 ,, |
| 6. கச்சா இரப்பர் | முன்பு வரியில்லை | 5 ,, |
| 7. இயந்திர சாமான்கள் | 5¼ சதவீதம் | 10 ,, |
| 8. செய்தித்தாள் வகை | டன்னுக்கு ரூ. 31½ | டன்னுக்கு ரூ. 100 |

சுங்க வரிகளின் உயர்வு மூலம் மட்டும் ஆண்டு ஒன்றுக்கு 6 கோடி ரூபாய் மத்திய அரசாங்கத்துக்குக் கிடைக்கும்.

கொள்ள முடியும். இன்னும் இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களிலும் தென்னுட்டுக்கு நீதி கிடைக்கவில்லை என்று நாம் கூறிக்கொண்டிருக்கும் பொழுது, இழைக்கப்படும் அநீதிக்கு மேற்கொண்டு பலன் தரும் வகையில் திட்டங்கள் விரிவடைவதோ, அதற்காக நமது பகுதியிலிருந்து ஏராளமாக வரிப்பணத்தைத் "கொள்ளையடித்து"ச் செல்வதோ நம்மால் ஒருக்காலும் ஒப்புக்கொள்ள முடியாதன.

முதல் ஐந்தாண்டுத் திட்டம் முடிந்து இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் ஆரம்பித்து ஓராண்டு ஆகிவிட்டது. ஆனல் இதுவரைத் திட்டங்களுக்கு செலவிடப்பட்ட தொகைகளுக்குத் தகுந்த பலன்களை இந்திய உபகண்டம் அடையவில்லை. ஐந்தாண்டுத் திட்டத்துக்குப் பின் வாழ்க்கைத்தரம் உயர்ந்ததாகத் தெரியவில்லை. வரிகள்உயர்ந்திருக்கின்றன, "விலைவாசிகள் உயர்ந்திருக்கின்றன, ஆனல் வாழ்க்கைத் தரம் உயரவில்லை. ஐந்து ஆண்டுகளுக்கு முன்பிருந்ததை விட இப்பொழுது வாழ்க்கை நிலை மோசமாகியுள்ளது. மக்களுக்கு இருந்த வாங்கும் திறமை குறைந்தது. ஏழைகள் அதி ஏழையாகின்றனர், பண[...]

(10-ம் பக்கம் பார்க்க)

# தீர்ப்பு!

நெல்லை அருணன்.

நீதிமன்றம் வழக்காராய்ந்து தீர்ப்புக் கூறுமுன் சமுதாயம் தீர்ப்பளித்துத்தான் ஒருவனை அங்கே அனுப்பி வைக்கிறது. அந்தத் தீர்ப்புச் சரியா தவரு என்று சீர்தூக்கிப் பார்க்கவோ அதற்கென வழங்கப்படும் தண்டனை தக்கதாதகாததா என அறுதியிடவோ அங்கே நீதிபதிகள் கிடையாது-வழக்கறிஞர்கள் கிடையாது. ஏன்? அப்படி யாருமில்லாமலே உருவாகி நிலைபெற்றிருப்பதுதானே சமுதாயம். எண்ணிக்கையில் மிக்கவர் கூடி ஏற்படுத்திக்கொண்டதுதானே சமுதாயம் எனும் தத்துவம். அதன் அடிப்படையாகப் பிறந்ததுதானே உயர்வு தாழ்வு என்னும் வேறுபாடுகள். அதையொட்டியேதான் ஒரு பெருஞ்சாரார். ஒருவனைக் குற்றவாளி என்று தீர்ப்புக் கூறிவிட்டபின்னரே நீதிமன்றம் குற்றவாளி என்று அவனை ஏற்றுக்கொள்ளுகிறது. நீதிமன்றத்தில் வழக்குறைக்கவும்-வழக்காடவும் தகுதி தேர்வு முதலியவைகள் ஏற்பட்டிருப்பதுபோல சமுதாயத்தில் எந்த வரம்பும் கிடையாது. யாரோ ஒருவர், எவரோ ஒருவரை, ஏதோ சிலவகைகளில் அவர்-அவரைச்சார்ந்தோர் அவர் வாய்மொழிகளை அப்படியே ஆமோதிப்பர். அதன் துணைகொண்டே நீதிமன்றத்தின் தீர்ப்பை ஏற்க மிகப்பலர் அனுப்பப்படுகின்றனர்.

இதைப்போல சமுதாயத்தின் நான்காம்படி ஐந்தாம்படி வாழ்வோர் சிலர்—மேற்படியினரைக் குற்றஞ் சாட்டுவதாயின்-நீதிமன்றத்தில் ஏற்றி நிறுத்துவதாயின் சட்டத்தின் கொடுந் தீர்ப்பை ஏற்கவேண்டிய நிலையுடையோர் பெரும்பாலோர் இருக்கின்றனர். வளர்கின்றனர்-வாழ்கின்றனர். இவற்றிற்குக் காரணம் சமுதாயத்தின்-மனித இனத்தின் உரிமைகள் பலவகைகளில் கட்டுப்படுத்தப் பட்டிருப்பதாகும்; வாயில்லாப் பூச்சிகளாக வாழவேண்டிய நிலையையும் நியதியையும் நிலை நிறுத்தி வைத்திருப்பவர்கள், தங்கள் சுயநலன் வளம் ஆகியவைகள் கெடாதிருக்க அவற்றைப் பாதுகாத்து வருவதாகும்.

அத்தகையோர் பலரால் குற்றவாளி என்று உறுதிப் படுத்தப்பட்ட ஒருவன் கைதிக் கூண்டிலே நின்றிருந்தான். அவன் கண்கள் நாலாபக்கமும் சுழன்று பார்த்துத் தவிப்பும் ஏக்கமும் கொண்டிருந்தன. கண் முன் காணப்படுவோரெல்லாம் தனக்கு நல்ல அறிமுகமானவர்களாகவும், பல முறைகளில் தன் காலிலேயே விழுந்து மன்னிப்புக் கேட்கின்ற அளவுக்கு நடந்து கொண்டவர்களாகவுமே தென்பட்டார்கள். அவ்விதம் அவர்கள் நடந்து கொண்ட பல காரியங்களின் எதிரொலியே அவன் கூண்டிலே நிறுத்தப்பட்டிருப்பது என்பதை அப்போது அவன் உணர்ந்து கொள்ள முடியவில்லை. அவர்கள் தான் அவன் மீது குற்றம் சாட்டினர். அவர்களே தான் அந்தக் குற்றங்களுக்குப் பொறுப்பாளி என்று சொல்ல அவன் நிலை அப்போது இடந்தரவில்லை. நிரூபிக்க முடியாத நிலை. துடித்தான்-ஆத்திரப்பட்டான். தண்ணீரினுள்ளே அமிழ்ந்து கொண்டிருப்பவன் மூச்சுத் திணறுகின்றபோது எவ்விதம் செய்வகையறியாது துடிப்பானோ அதைப்போலவே அவனும் பரிதாபகரமாக நின்று கொண்டிருந்தான். அவர்களது செய்கைகளும் நடைமுறைகளும் அவன் கண்முன் பளிச்சிட்டுத் தென்பட்டன. அதே நேரத்தில் குற்றம் சாட்ட எதிர்க் கூண்டிலே நின்று சாட்சியம் கூறிய சொற்களும் காதில் கணீரென்று ஒலித்தது. ஒவ்வொருவரையும் பார்த்து எள்ளிப் புன்முறுவல் செய்தான். அவனது புன்னகை "அட நாணய மற்றவர்களே! என்னிடமிருந்து உயிர் தப்பி ஓடிய நீங்களா என் உயிர் கெடுக்க முனைந்திருக்கிறீர்கள்"? என்று கூருமல்கூறிற்று. அவர்களிடையே காணப் பட்டசாயல் "ஒழிந்தாய் இன்றோடு" என்று நீதிபதியின் தீர்ப்பை எதிர்பார்த்திருப்பதை விளக்கிக் காட்டிற்று. சுவர்கள் பேசுவது போல மெல்ல மெல்ல "தூக்குத்தான் - தூக்குத்தான்" என்று வெளிப்புறமிருந்து வரும் சொல் அவன் சிந்தனையை உலுக்கிற்று. அசைவற்று மரம்போல் நின்று கொண்டிருந்தான். வழக்கறிஞர்களின் வாதமும்-அறங்கூறுவோரின் முடிவும் கூறப்பட்டப்பின், நீதிபதி சற்றே மௌனமாக அமர்ந்திருந்தார். எல்லோருடைய சொல்லின் பொருளும் அவனைத் 'தூக்கிலிடவேண்டியதுதான்' என்று அறுதியிட்டுக் கூறிற்று. ஆனால் நீதிபதியின் மனமோ "தூக்குத்தண்டனை கூடாது" என்று உறுத்திற்று. ஒரு முறை அவனை நிமிர்ந்து பார்த்தார். "என்னைத் தூக்கிலிடப் போகிறீர்களா?" என்று கேட்பது போலிருந்தது அவன் பார்வை. தலையை அசைத்தவாறே எழுந்து தனியறைக்குச் சென்று விட்டார். அங்கே உலவியவாறே சிந்தித்துக் கொண்டிருந்தார். எவ்வளவு தான் முயன்றாலும் தூக்குத் தண்டனையை அவனுக்கு விதிக்க அவர் மனம் ஒப்பவில்லை. மேலும் மேலும் சிந்தித்தார். மீண்டு தன் இருக்கையில் வந்தமர்வதற்குள் திட்டவட்டமான முடிவுக்கு வரப் பெரும்பாடுபட்டுக்கொண்டிருந்தார். இதற்கிடையில் வெளியிலும் உள்ளிலுமாகப் பலபேர் பலவிதம் பேசிக் கொண்டிருந்தனர் "அடேயப்பா! என்ன ஆட்டம் ஆடினான். இன்றுடன் ஒழிந்தான்" என்று சொல்லிக்கொண்டிருப் போருடன் வந்த சில அவசரக் காரர்கள் "சரி வா போகலாம், இன்னும் என்ன இருக்கிறது? கருப்பு உடைய மாட்டிக் கொண்டு வரவேண்டியதும், இரண்டே வார்த்தையில் தண்டனையைக் கூற வேண்டியதுந் தான்பாக்கி! நாம் ஏன் இன்னும் நின்று கொண்டிருக்க வேண்டும்" என்னும் திடீர்முடிவுக்காரர்களும், "இவனைப் போன்றவர்களுக்கு இது ஓர் நல்ல பாடமாக இருக்கும். இனி ஒருவனும் இந்த எண்ணத்துடன் புறப்பட மாட்டான்" என்று சிலரும். இவ்வாறு பலவேறுபட்ட அபிப்பிராயங்கள் ஒரு தனி மனிதனைப் பற்றி நடை பெற்றுக் கொண்டிருந்தது. அது வரை தங்கள் நண்பனுயிருந்த ஒருவன், அன்று கேட்பாரற்ற முறையில் என்ன நேருமோ-யாது தீர்ப்பாகுமோ என்ற ஏக்கத்தோடு நிற்க, தாங்கள் வெளியில் நின்று பார்த்திருக்க நேர்ந்ததே என்று வருந்துகின்ற கைதியின் தோழர்களும் ஆக எல்லோரிடையேயும் தீர்ப்பின் வகை காணத் துடிக்கும் தன்மையிருந்தது.

நீதிபதி வந்து அமர்ந்தார். "கைதியைப் பற்றிய விசாரணை ஜூரர்களின் தீர்ப்பு ஆகியவைகள் அவனைத் 'தூக்கிலிட வேண்டும்' என்று தான் நிர்ணயிக்கின்றன. ஆனால் அவன் மீது சாட்டப் பட்டுள்ள குற்றங்கள் 'சில ஆண்டுகள் தண்டனை'க்கே உரித்தானவை. ஆகவே கைதிக்கு ...ஆண்டுகள் காவல் தண்டனை விதித்திருக்கிறேன்" என்று கூறியதுடன் கோர்ட் கலைந்தது எனும் செய்தியை இரவுப் பத்திரிகைகள் தாங்கி வந்தன.

சில பெரிய மனிதர்கள் (என்று கூறப்படுவோர்) "இந்த நீதிபதிக்கும் கைதிக்கும் ஏதோ தொடர்பு இருக்க வேண்டும். இல்லையேல் இப்படித் தீர்ப்பு வழங்குவாரா? நமது சாட்சியங்களை யெல்லாங்கூடப் பொய்யாக்கி விட்டாரே! அவன் கூட்டத்தார்கள் நம்மைச் சும்மா விடுவார்களா? எவ்வளவு விவாதம் எவ்வளவு சர்ச்சை அவ்வளவும் வீணனதா? என்ன தானிருந்தாலும் இப்படி நம்மையெல்லாம் இழிவு படுத்தும் படி இவர் செய்திருக்கக் கூடாது"

இப்படிப் பேசிக்கொண்டு ஊர்ப்பொது மன்றிலே உட்கார்ந்திருப்போரை அய்யன்மீர் நீங்கள் கூறிய சாட்சியங்களில் ஏதாவது உண்மையுண்டா? அந்தச் சாட்சியங்களே உங்கள் அவல நிலையை எடுத்துக் காட்டுகின்றன. நீங்கள் கூறிய குற்றச் சாட்டு விவரங்களை எப்படி நீங்கள் அறிந்தீர்கள் என்பதை நீதிபதி உங்களிடம் கேட்டிருந்தால்" உண்மையிலேயே அந்தக் குற்றத்திற்கு உரித்தானவன் கைதியல்ல - நீங்கள் தான் என்பது வெளியாகியிருக்கும். நல்லவேளை உங்கள் கௌரவம் காப்பாற்றப்பட்டிருக்கிறது என்று மகிழ்ச்சியடையுங்கள்" என இடித்துக் கூற அங்கேயாருமில்லை! இருந்தாலும் கூட அப்பெரிய மனிதர்கள் "போடா! நீயும்அவன் கூட்டாளியோ! நாங்கள் என்ன அக்கிரமம் செய்து விட்டோம்! அவன் செய்யும் அக்கிரமங்களைக் கண்டுபிடிக்கவே அவ்வாறு நடந்து கொண்டோம்" என்பதாகக் கூறிச் சமாளித்திருப்பார்கள். என்றாலும் அவர்கள் உள்ளம் (இருந்தால்) தவறு செய்தவன் நீ தானென்று உறுத்திக் கொண்டுதானிருக்கும். இப்படி ஒரு வகையினர்.

அடுத்து: "தூக்கிலிட்டிருந்தாலும் பரவாயில்லை, உடனே உயிர் போயிருக்கும்! நாள் பூராவும் சித்திரவதைப் படும்படி செய்துவிட்டாரே. எவ்வளவு கல்நெஞ்சம் இவருக்கு" என்று கூறும் கைதியின் நண்பர்களும் அனுதாபிகளும். ஆனாலவர்கள் எதற்கும் மாறுபட்டுப் பேச முனைவார்கள். அந்தநிலையில் "தூக்கு" என்று அறிவிக்கப் பட்டிருந்தால், "அடபாவி, ஒரு உயிரைக் 'கொலை செய்யப்போகிறாரே' என்ற எண்ணங்கூட இல்லாமல் தூக்கிலிட உத்திரவிட்டு விட்டாரே! நல்ல கதி கிடைக்குமா இவருக்கு? தூக்கிலிட வேண்டிய அளவுக்கு அவன் என்ன பெருங்குற்றம்-கொடிய குற்றம் செய்துவிட்டான்" எனக் கூறுவர். அவர் பக்கத் தாளமாக 'நீதிபதிகளின் குடும்பங்கள் ஒருபோதும் நன்ருய் வாழாது' என்று பூர்வ ஞானமும் சாபமும் தருவோரும், பின்னென்ன இப்படிப் பதைக்கப் பதைக்க உயிர்களை வாங்கிய பாபமும் அந்த உயிர்களின் சாபமும் சும்மாவா போகும் என்று அனுபவ சித்தாந்தம் பேசுவோரும் ஓர்புறம்.

"மிகவும் பரிதாபமானதும், இரண்டுங் கெட்டதுமான நிலையப்பா; ஜூரர்கள் தீர்ப்பு, அவன் குற்றவாளி என்பது. சட்டம் அவர்களுக்குத் துணை. நியாயமும் மனச் சாட்சியும் அவன் 'கொடிய தண்டனைகூட





அனுபவிக்கவேண்டியவன் அல்ல' என்று கூறுகிறது. தவித்துப்போய் விட்டார் நீதிபதி. என்றாலும் தைரியசாலி தான். தைரியத்துடன் நேர்மையும் இணைந்திருக்கிறது. இல்லாவிட்டால் தூக்குத் தண்டனையை நீக்கி அவனுக்குச் சில ஆண்டுத் தண்டனையைக் கூறியிருக்க முடியுமா? அவர் செய்ததற்கும் சட்டத்தில் இடமிருக்கத் தானே செய்கிறது. அத்தகைய சட்டத்தின் விதிவிலக்குமற்றவர்கள் கண்களில் தென்படாமல் போனதில் ஆச்சரியமில்லை தான். ஏனென்ருல் ஏனையவர்கள் குற்றவாளியை, குற்றங்களின் அமைப்புடனேயே கண்டு தீர்ப்புக் கூறுகின்றனர். நீதிபதி, மனிதன் - அவன் நிலை - நிகழ்ச்சி ஆகியவைகளைச் சீர்தூக்கிப்பார்த்திருக்கிருர் என்பது தான் பொருளாக இருக்கவேண்டும்" என, இரு சார்பிலும் சார்ந்து விடாமல் நடு நிலை வகித்துப் பேசினர்கள் ஒரு சாரார்.

யாவையும் நீங்க கைதியும், நீதிபதியும், மட்டும் சற்றும் சலனமின்றி அமைதியுடன் சென்றனர்.

தன்வரையில் எது சரி என்று படுகிறதோ அதனைச் செயல் படுத்த இயலாத அளவு தன்பதவியின் தன்மை இருந்தாலும், சட்டத்தின் ஒழுங்குக்கு உட்பட்டு எதைச் செய்வது சரி எனப்படுகிறதோ அதைச் செய்துவரும் ஒரு நல்ல சுபாவம் படைத்த மனிதர் நீதிபதி. குற்றம் நிகழ்ந்தது என்று சொல்வதைவிட, குற்றம் நடைபெற ஒரு காரணம் இருந்தது என்பதே அவர் கருத்து. தன் கருத்தை நிலை நிறுத்துவதற்குப் பதவியின் தன்மை இடந்தராதென்பதை நன்குணர்ந்தவரவர். ஆதலின் நடைபெற்ற அந்த வழக்கின் தன்மைபற்றி அவர் சிறிதும் மீண்டுச் சிந்திக்கவில்லை. ஆனல், அந்த வழக்கின் தீர்ப்புக்குப் பிறகு வெளிப்புறங்களில் நடைபெற்றுவரும் சில பேச்சும் நடைமுறைகளும் அவரைச் சிந்திக்கச் செய்தன. அதாவது, நன்கு பழக்கமான நண்பர்களும், அடிக்கடி தன்னை அறிமுகம் செய்து கொள்வது போல் எதிர்ப் படுகின்ற நேரங்களிளெல்லாம் வணக்கம் தெரிவித்துச் செல்வதை வாடிக்கையாகக் கொண்டவர்களும், கண்டதும் புன்னகை தெரிக்கும் பொதுவினருமான இவர்களெல்லாமுங்கூட ஏதோ பகைமை எண்ணத்தை வெளியிடுவதுபோல பாராமுகமாகவும், முகத்தை வேறுபக்கம் திருப்பிக்கொண்டும் வெறுப்புக்காட்டுவதாக இருந்தார்கள். அதன் காரணம் உணரப்புகுந்தபோதுதான், அந்த வழக்கைப் பற்றிய நினைவு அவரை வந்தடைந்தது: சற்றே வழங்குகின்ற நிகழ்ச்சிகளை மீண்டும் நினைத்தார்.

அவன் ஏன் இத்தகையோர்களால் வெறுக்கப்படுகிருன்! எல்லோரும் ஒரேமுகமாகக் குற்றம் சாட்டவேண்டிய அளவுக்கு அவன் புரிந்த கொடுமை தானென்ன? குற்றச்சாட்டுகள்யாவும் அவன் குற்றவாளி என்பதை நிரூபிக்க முனைகின்றனவே தவிர, காரணம் தெரிவிக்கவோ விளக்கவோ இல்லை. தற்போது வாய் கூசாது அவனையும் என்னையும் ஒன்ருகக் கருதி ஏசுகிருர்கள். நான் அவனுக்கு உடந்தை என்றும் கூறுகிருர்கள். அந்தச் சொற்கள் உண்மையானதென்று பலரும் நம்புகிருர்கள். இதைப் போலத்தானே அவன் மீதுள்ள குற்றச்சாட்டையும் தயார் செய்திருப்பார்கள்? பாவம். ஏதும் அறியாதவனும் எதற்கும் சம்பந்தப்படாதவனும்கூட இதுபோல் சட்டத்தின் கீழ் குற்றம் செய்தவனுகப் பிணைக்கப்பட்டு அதை மறுக்க வகையற்ற காரணத்தால் தண்டனையை ஏற்றுத் தவித்துக் கொண்டிருக்கும் அவனைப்பற்றி எண்ணிய போது தன் நிலையையும் மறந்து இரங்கினுர்.

அன்று வந்த புது ஆள் அவன்! இனி அங்குள்ளவர்களைப் பழகிக்கொள்ளவேண்டும். வந்ததும் வராததுமாக அங்கே இருக்கும் அவன் இனத்தைச் சேர்ந்தவர்கள், அவன் வந்த வரலாற்றையும் வகையையும் கேட்டனர். அவர்களுக்குப் பதில் கூறுவதற்கே திகைத்தான். என்ன குற்றத்திற்காக இங்கு அனுப்பப்பட்டிருக்கிருய்-எவ்வளவு காலம் நீ தண்டனை அனுபவிக்க நிர்ணயிக்கப் பட்டிருக்கிறது என்பதே அவர்களின் கேள்வி. நான் இன்ன காரணத்திற்காக இங்கு வந்திருக்கிறேன் என்பதைத் தனக்குத்தானே எண்ணிக் கொண்டபோதுதான் தன்மீது சாட்டப்பட்ட குற்றத்தின் தன்மைகளையும்-குற்றம் சாட்டியோரையும் நினைத்தான். கம்பியைப் பிடித்துக்கொண்டு நின்ருன். அவன் கண்கள் புற வெளியை நோக்கின, சிந்தனை சிறகடித்துப் பறந்தது.

'என்னை விட்டுவிடப்பா! என் மானம் போய்விடும்"

"உமது மானம் போய்விடுமென்று உள்ளம் குமுறுகிறீரே! உம்மால் வாழ்வே போய் விட்டதென்று கதறி அழுது கொண்டிருப்பவளைப்பற்றி ஒரு கணம் நினைத்தீரா! பணத்தின் பலத்தால் பலவற்றையும் பதட்டமின்றிச் செயலாற்றும் பண்பாடு கொண்டவரே! உமக்குப் பெயர் உத்தமர், சத்தியந் தவருதவர், பெரிய மனிதர். அதோ அங்கேஅழுது புலம்பி, அரைவயிற்றுக் கஞ்சிக்கு விதியற்ற காரணத்தால் அருமையான பெண்மையை அயோக்கியனுக்கு அர்ப்பணிக்க நேர்ந்ததே என்று கூற வகையற்றுத் தவிப்பவள் வியபசாரி, வேசி, காமாந்தகாரக் கள்ளி! இத்தகைய பட்டங்களை வழங்குவது உம்போன்ற உத்தமர்கள் கூட்டம். எத்தனை நாளைக்கு இந்தப் பித்தலாட்டம்?

"இனி அவ்வாறு நடந்து கொள்ளமாட்டேன்! என்னை விட்டுவிடு! ஓடிவிடுகிறேன். இனி அவ்விதம் நேர்ந்தால் நீ என்ன சொல்லுகிருயோ அதற்குக் கட்டுப்படுகிறேன்"

"சரி! ஓடு!"

ஏழைப் பெண்ணைத் தன் இச்சைக்குப் பலியாக்கிவிட்டு-ஏதுங்கதியற்ற நிலையில் அவளைத் தவிக்கவிட்டுப் பின் அவளை ஏசிப் பேசுகின்ற 'எல்லார்க்கும் நல்லவர்'க்கும் அவர் போன்ருரின் முயற்சியால் சிறைக் கம்பிகளை வருடிக் கொண்டிருப்பவனுக்கும் ஒரு நாள் நடைபெற்ற உரையாடல் இது.

இவ்விதம் பலரால் பெரிய மனிதர்களென்ற பாராட்டைப் பெற்றவர் பலரையும் அவன் சந்தித்தான். அவனது சந்திப்பு என்ருல் சாமான்யமானதல்ல. ஒன்று அவர்கள் தன்னைத்தானே திருத்திக்கொள்கின்ற நிலைபெறவேண்டும். அல்லது அவனுல் தரப்படும் திருத்தப்பிரயோகங்களை ஏற்க வேண்டும் என்று பொருள். இதை அனைவரும் அறிவர். அதனுல்தான் எல்லோரும் ஒருமுகமாக முயன்று அவனைச் சிறைக் கம்பிக்குள் அமைத்து வைத்தனர். அதுவும் அவ[...]கள் எண்ணம் முழுதும் ஈடே[...]மல் போய்விட்டகாரணத்தா[...] இல்லையெனில் அவனைப் பிண[...]மாகக் காணவேண்டுமென்ப[...] தான் அவர்கள் பேரவா! அதி[...]லிருந்து-அவர்கள் குறிப்பி[...]லிருந்து அவனை அப்பா[...] படுத்தியவர்நீதிபதி. சுருங்கக் கூறினுல் அவன் ஒருநீதிபதி[...] செய்யவேண்டிய காரியத்தை[...] தான், பட்டமும் பதவியுமின்றி[...] சமுதாய உணர்ச்சியோடு செய்து வந்தான். தீயவரும் திருடரும், கொடிய எண்ண[...] கொண்டோரும் குடிகெடுக்கும் குணமுடையோரும் அவனி[...]ருக்கும் திக்குநோக்கி நடக்கவும் பயந்தனர். பசுத்தோல் போர்த்த புலிகள் அந்தப் பாதையிலே சென்ருல்-அல்லது அவன் அவைகளைப் பாதையிலே சந்திக்க நேர்[...]தால் அதன் பகட்டுப்போர்வை[...]கள் அகற்றப்படும். அரங்கி[...]னுள் அரனையும் அயனையும் துணையாகக் கூறிக்கொண்டு செயலாற்றும் காரியங்களெல்லாம்அம்பலத்திற்குக்கொண்டு வரப்பட்டு, அதன் உண்மை விளக்கங்களும் விளைவுகளும் எடுத்துக் காட்டப்படும். அதற்கே அவனுக்கு அஞ்சி[...]னர் அவன் அறியவகையில்லா[...]மல் அட்டூழியங்கள் பலவற்றையும் அடுக்கடுக்காய்ச்செய்து வந்தனர். அவனும் அடுத்தடுத்து முயன்று அவர்களின் அந்தரங்கச் சதிகளையும் அம்பலப் படுத்தினுன். ஆரும் அறியா மற்செய்த காரியங்களை அனைவரும் அறியச் சுட்டிக் காட்டினுன். அப்போது அவ[...]கள் கைகட்டி வாய் புதைத்து நிற்க வேண்டிய நிலை வந்தெ[...]தியது. பகட்டுகள் பாழானது[...] ஆடம்பரங்கள் அலைக்கழிக்கப்பட்டது. கபட நடவடிக்கைகள் கண்முன்னே நிரூபிக்கப்பட்டன. இழிதன்மைகள் எடுத்துக் காட்டப்பட்டன. அதனு[...]லேயே அவனை அழிக்க முற்பட்டனர்.

அன்று அறமன்றத்திலே அவன் மீது பழி சுமத்தி வீ[...]றிருந்தோரெல்லாம் அடுத்[...]வனை அழித்துத் தான்வா[...] ஆண்டவன்பெயர்கூறி உயர்[...] கொள்ளும் ஆஷாடபூதிகள் உள்ளதை இல்லையென்றுகூ[...]ஊரை ஏய்த்து உயிரையும் உ[...]லையும் வளர்த்துக் கொண்[...]ருந்த உயர்நிலையினர், நாவும் நெஞ்சும் வேறுபட்ட நல்[...] பாம்பினும் கொடிய நஞ்[...] உருக்கொண்டோர்—எப்பே[...]தும் நல்ல தெண்ணியறியா[...] நய வஞ்சக நரிகள் ஆகியவ[...]கள்தாம். அவர்களை எண்ணி[...] பார்த்தபோது இடிந்த இதய[...] தினனுன் அவன்.

அத்துடன் சிறைச்சாலையி[...] அவன் கேட்ட பல செய்திகள் உண்மையிலேயே அவனை[...] திகைப்படையச்செய்தது. அதாவது, குற்றம் செய்[...] திருப்பதற்காக அரசினரி[...] உதவிச் சம்பளம் பெற்று கொண்டிருப்போரின் வரலா[...] களைக் கேட்டபோது "அய்யே[...]

...இவ்வளவு நல்ல பல பணிகளை மேற்கொள்ளும் அரசினர் ...அமைச்சார்ந்தில்லையே' என்று வருந்தினான். அவன் கேட்ட வரலாறுகள் :

கைதேர்ந்த திருட்டுகளைச் செய்ய வல்லவன் ஒருவன் தன் தண்டனையை அனுபவித்து விட்டுச் சென்றபின்னர், தனக்குத் தெரிந்த திருட்டு முறைகளையெல்லாம் புத்தக உருவில் வெளியிட்டான். அரசாங்கம் உடனே அந்தப் புத்தகத்தின் முழு உரிமையையும்தான் கைப்பற்றிக்கொண்டு, அதற்கான செலவுகளையும் அவனிடம் கொடுத்து மேலும் அவ்வாறு வெளியிடாமலிருப்பதற்காக உதவித் தொகையும் தந்தது.

எத்தகைய எஃகுகளையும் உடைத்துத் திருடவல்ல ஒருவனை, அவ்விதம் திருடாமலிருப்பதற்காக உதவிச் சம்பளம் சர்க்கார் கொடுத்தது. ஒரு இரும்புப்பெட்டிக்கம்பெனி அவனைத் தங்கள் கம்பெனி வசமே சம்பளத்திற்கு அமர்த்திக்கொண்டது.

இவைபோன்றுள்ள இன்னும் பலவற்றை அவன் கேள்வியுற்றான். அத்துடன் அவன் வாழ்க்கையில் சந்தித்த பலரையும் நினைத்தான். அவர்களோ ஆயுதமில்லாமலே கொலைசெய்யும் அற்புத வித்தைக்காரர்கள், விழித்திருக்கத் திருடிச்செல்ல ஒரு விதியமைத்துக்கொண்ட விபரீத சித்தக்காரர்கள், உயிரிருக்க உடலுண்டு உருப்பெருக்கும் உலுத்தர்கள்உபதேசியார்கள், இன்னோரன்ன பிறர்கள். அவர்களையெல்லாம் திருத்தவும் அவர்கள் பிடியில்பட்டு ஆபத்தை அணைத்துக்கொள்ளும் அப்பாவிகளைக் காப்பாற்றவுமே தான் முயன்றான். அதன் பயன் சிறைச்சாலை. அவர்கள் இருக்கவேண்டிய சிறைச்சாலையிலே தான் அடைபட்டுக் கிடப்பதை எண்ணி அயர்ந்தான். இப்படியே ஒவ்வொருநாளும் ஒவ்வொருவிதமாக எண்ணி உள்ளம் உடைந்து, தனக்கு வழங்கப்பட்டிருக்கும் தண்டனைக் காலத்தை மெள்ள மெள்ளக் கடந்துவந்தான். ஆனால் நிதம் அவன் நீதிபதியையும் அவர்தம் தன்மையையும் எண்ணி நன்றி கருதாத நாளே கிடையாது. அவர் வாயிலிருந்து 'தூக்கு' என்ற ஒரு சொல் வந்திருக்குமானால் தான் இவ்விதம் சிந்திக்கும் தருணங்கள் எது? தொட்டதற்கெல்லாம் கொல்லு, வீழ்த்து என்று கூறுபவர்களும், கூறுமலே செயலில் காண விழைவோரும் நிறைந்திருக்கின்ற இந்தச்சூழலில், தன் ஒரு சொல்லினால் அதை அதிகார பூர்வமாக-எவரும் மறுக்க முடியாதவிதமாக ஆணையிடும் தன்மையிருந்தும் தக்கது செய்த அவரை மறக்க முடியவில்லை அவனால். என்சாவு ஒன்றையே எதிர்நோக்கி இருந்தவர்கள் மன்றம் அது! அவருக்குத் துணையாயிருப்போரெல்லாம் கொலைதான் எனக்குத் தகுதி

என்றார்கள். அவ்வாறிருந்தும், காவல்தண்டனை வழங்கிய தன்மையை எண்ணி உள்ளம் மகிழ்ந்தான்.

அவன் விடுதலைபெறும் நாள் நெறுங்கி வந்தது. வெளியிலிருந்த அவன் நண்பர்களெல்லாம் அவன் வரும்நாளை எதிர்நோக்கி இருந்தனர். அவர்கள் உள்ளமெல்லாம் நீதிபதி செய்தது கொடுமை என்று உறுத்திக் கொண்டிருந்தது. அப்படி அவர்களை உருவாக்கியதும்கூட "ஊரை உருக்குலைத்துத் தன் உருவைவளப்படுத்தும் 'உன்மத்த மதியினர் செயல்தான்.

"பார்த்தீர்களா! இந்த நீதிபதியின்கொடுமையை. ஒரேயடியாக அவனைக் கொன்றிருக்கலாம். அதைவிட்டு அணு அணுவாக வதைப்படும்படி தண்டனை விதித்து விட்டாரே! எவ்வளவு வேதனைப்படுவான்."

என்று நரியுபதேசம் செய்து அவர்கள் மனநிலையை மாற்றி வைத்திருந்தனர். அவர்களின் அடுத்த குறி நீதிபதி. 'ஒருக்கால் அவன் வெளியில் வந்து நீதிபதியிடம் நன்றியுள்ளவனாக மாறிவிட்டால் தங்களின் செயல்கள் வெளியாகலாம். ஆகவே-இவர்களை இப்போதே தயார் செய்துவைத்தால் அவன் வெளிவந்ததும் ஏவிவிட்டு நீதிபதியை ஒழித்துவிடலாம். ஒருவேளை அவன் அதற்கு இணங்கவில்லையானால் இவர்களையே கருவியாகக் கொண்டு அவர்கள் இருவரையுமே இல்லாமற் செய்துவிடலாம்' என்பதுதான் அவர்கள் திட்டம்.

இதை அவன் சிறைக்குள் புகுந்த சிறிது கால அளவிளேயே செயலாற்றியிருக்க முடியும். அவர்கள் அதற்கு இசையவில்லை. சிறைக்குள்ளிருக்கும் தங்கள் தலைவனுக்கு இடையூறு நேர்ந்துவிடக்கூடுமென்று கருதினர். மேற்கொண்டு அவர்களை வலியுறுத்த இயலாத காரணத்தால் வாளா இருந்துவிட்டனர் வயண வாழ்வினர்.

ஊரெங்கும் ஒரே பரபரப்பு. அவன் விடுதலையாகி வரும் வரும் நாள். அன்று காலை முதல் எங்கும் அமைதியும் மௌனமும் காரணமின்றி நிலவியது. அவன் வருகையைப் பற்றி, பலர் பலவாறு பேசிக் கொண்டனர். எல்லோரும் அச்சமும் திகிலும் கொண்டிருந்தனர். நீதிபதியை வேறு ஊருக்குச் சென்றுவிடும்படி ஆலோசனை கூறினர். ஆனால் அவரோ எங்கும் செல்லப் போவதில்லை என்ற முடிவுடன் இருந்தார். விடுதலை நாளன்று காலை அவர் மனமும் சற்றே அலைவுற்றது. தெருக்கள் தோறும் கைதியின் நண்பர்கள் ஒருவர் இருவராகச் சுற்றிக் கொண்டிருந்தனர். நீதிபதி மக்களின் உதவி இருந்தால் அவன் எதுவும் செய்துவிட முடியாது என்ற எண்ணத்தோடு வீட்டைவிட்டு வெளியேறி, பொது இடங்களையடைந்து ஒவ்வொருவராக வேண்டினார். அவர் கால்கள் பள்ளிகளையும் கல்லூரிகளையும் பொது மன்றங்களையும் அறநிலையங்களையும்நோக்கி நடந்து திரும்பியது.

"நான் நீதிவழங்கினேன். அவன்மீது சாட்டப்பட்டுள்ள குற்றத்திற்கு தூக்குதண்டனை தகுதியல்ல என்பதை கருதியே அவ்வாறு செய்தேன். இப்போது உங்கள் ஒத்தாசை இருந்தால் அவன் எதுவும்செய்துவிட முடியாது" என்று கூறி வேண்டினார்.

"நீதிதானே செய்தீர்! நீதியின் படிதானே நடந்தீர். அதையே நம்பியிரும். எங்கள் உதவி உமக்கில்லை என்று நிராகரித்துப் பேசினர்"

வீட்டில் சென்று அமர்ந்தார். அடுத்துச் சில நிமிடங்களில் கூப்பிய கரத்துடன் வணக்கம் தெரிவித்து ஒரு உருவம் அவர்முன்னேநின்றது. அவன் தான்! அவரால் தண்டித்து அனுப்பப் பட்டவன்தான். திருந்தியவனாய் வந்து அவர் முன் நின்றான்.

அய்யாவே! தாங்கள் என்னைத் தூக்கிலிட்டிருந்தால் கொடியவன் என்று கூறப்பட்ட ஒருவனைக் கொன்றுவிட்டவர்களாயிருப்பீர்களே தவிர, என்நிலையெய்தும் தகுதியுள்ள ஒருவனை உருவாக்கி இருக்கமுடியாது. தங்கள் தீர்ப்பின் பயனால், கற்றுக் கொள்ளத் தவறி விட்ட பல உண்மைகளையும் சில மாற்றங்களையும் கைக்கொண்டு விட்டேன். தங்களால் உயிர் கொடுக்கப்பட்டநான் என் கடமைகளை இனி விரைந்து செய்துவருவேன். வருகிறேன்! என்று வணங்கிச் சென்றான். நீதிபதி அவனை உள்ளூற வாழ்த்தி வழியனுப்பி வைத்தார். அவனுக்காகக் காத்திருந்த நண்பர்கள் புடை சூழ அவன் தன் இருப்பிடம் நோக்கி நடந்தான். ஊரார் தங்கள் திட்டம் பாழானதை எண்ணி அச்சமும் நாணமும் கொண்டனர். இப்படிப் பல உண்மைகளையறியத் தந்தது நீதிபதியின் தீர்ப்பு. ○





# புதுமுகம் தந்த புதுமை!

இக்பிரம் ஜின்னா

மயிரைக் களைந்து முகத்தை ...ழகுபடுத்தும் கலை, எவ்...ளவு காலமாக இருந்து வரு...றது என்று சொல்லமுடி...ாது. ஐயாயிரம் ஆண்டு...ளுக்கு முன்பே அந்தப் பழக்...ம் இருந்திருக்கவேண்டுமென்...து தெரிகிறது. எகிப்திய ...ாட்டு மக்களுக்கு, கூர்மை...ான கத்திகொண்டு மயிரை ...கற்றும் முறை தெரிந்திருக்க...வண்டுமென்பதற்குத் தகுந்த ...ஆதாரங்கள் இருக்கின்றன. ...லகின் பல பகுதிகளில் ...ாணப்படும் பல்வேறு வகை...ான நாகரிகங்களிலும், மயிரை ...ழித்துக்கொள்ளும் பழக்கம் இருந்ததாகத் தெரிகிறது. ...யாயிரம், ஆறுயிரம் ஆண்டு...ளுக்கு முன்பிருந்தே அந்தப் ...ழக்கம் தெரிந்திருந்த போதி...லும், தற்காலத்தில் உபயோ...க்கும் "பிளேடு" முறை ஐம்...து ஆண்டுகளாகத்தான் இருந்துவருகிறது. முதல் சவ...ப் பிளேடைக் கண்டுபிடித்த...வர் கிங் கில்லட் என்பவர்.

கிங் கில்லட் அமெரிக்காவில் ...ுரூக்லின் என்ற இடத்தில் ...ழைய சாமான்கள் வியாபாரம் செய்பவர். ஏதாவது "மலிவான உபயோகப்படுத்தப் பட்...தும் எறியப்பட்டு, மீண்டும் வாங்கும்படியான" ஒன்றைக் கண்டுபிடிக்க வேண்டுமென்...து கில்லட்டின் ஆவல். ...ருநாள் காலை, சவரக்கத்தியைத் தீட்டிக்கொண்டிருக்கும் பொழுது, சவரம் செய்து கொள்ள "மலிவான" ஒன்...றைக் கண்டுபிடித்தால் என்ன? என்ற எண்ணம் கில்லட்டுக்கு ...ண்டானது. உடனே அருகிலிருந்த நகருக்குப் போய், ...ழைய சாமான் கடையில், கடிகாரத்துக்குப் போடும் எஃகுச் ...சுருள் ஒன்றையும், ஒரு அரம், ...த்தளைத் தகடு முதலியவற்றையும் வாங்கிவந்தார். எஃகுத் தகட்டைச் சிறியதாக வெட்டி, ஒரு முனையைச் சாணை பிடித்து, அதை பித்தளைத் தகட்டுடன் பிணைத்து, முதல் "சவர பிளேடை" கில்லட் உண்டாக்கினார். அதை ஒரு வேடிக்கைப் பொருளாக அவருடைய நண்பர்கள் கருதினர்களே அன்றி, அது ஒரு வியாபாரப் பொருளாக ஆகும் என்று அவர்களால் எண்ணிப் பார்க்க முடியவில்லை. கத்தி, தகடு முதலியவைகளைப் பெருமளவில் உண்டாக்கும் தொழில் இடங்களுக்குப் போய் தனது கண்டுபிடிப்பை கில்லட் காட்டினார். அந்த வேடிக்கைப் பொருளைபார்த்துவிட்டு, "இந்தப் பைத்தியக்காரத்தனத்துக்கு எங்களுக்கு நேரமில்லை" என்று சொல்லி அனுப்பிவிட்டார்கள். அப்பொழுது இருந்த தொழிலதிபர்களின் நோக்கமெல்லாம் "நீண்டநாள் வரக்கூடிய ...றுதியான" சவரக் கத்தியை உண்டாக்குவதில் இருந்தது. அதற்கு நேர்மாறாக, "ஒன்றிரண்டு தடவை மட்டும் உபயோகத்துக்கு வரும் மலிவான" சவரத் தகட்டைப்பற்றி கில்லட் பேசியது அவர்களுக்குப் பைத்தியக்காரத்தனமாகப்பட்டது.

மற்றவர்களிடம் போய்சொல்வதில் பயனில்லையெனக் கண்ட கில்லட், தானே ஒரு தொழிற்சாலையை உண்டாக்குவதில் ஈடுபட்டார். அதற்கு ஐயாயிரம் டாலர் தேவைப்பட்டது. அந்த முதலைச் சேகரிக்க கில்லட் பணம் போடக்கூடிய நண்பர்கள், தெரிந்தவர்கள் எல்லோரிடமும் அலைந்தார். ஆறு ஆண்டுகள் விடாப்பிடியாகச் சுற்றியடித்ததில் 20பேர்கள் அவருடைய தொந்தரவு பொறுக்க மாட்டாமல் தலைக்கு 250 டாலர் முதல்போட்டு கில்லட்டுக்கு உதவினர்கள்.

5000 டாலர் முதல் சேர்ந்ததும், கில்லட் "சவரபிளேடு" செய்வதற்கான இயந்திரங்களையும் எஃகுத்தகடுகளையும் வாங்கி, கடைசல் தொழிலில் தேர்ந்த ஒருவரையும் வேலைக்கமர்த்திக் கொண்டார். ஒரு ஆண்டு கழித்து 1903-ல் முதல் "சவர பிளேடு" தயாரிக்கப்பட்டு, "விற்பனைக்குத் தயார்" என அறிவிக்கப் பட்டது. பிளேடுவிற்பனைக்குவந்தவுடன் கம்பெனி கடனில் மூழ்கியிருந்தது, வேலை செய்தவர்களுக்குக் கூலிகொடுக்க கில்பர்ட்டிடம் பணம் இல்லை. புதிய "சவரபிளேடு' முறையை எல்லோரும் ஆவலுடன் பார்த்தார்களேயன்றி, அதை வாங்கி உபயோகிப்பார் யாரையுங் காணும். 1903 பூராவும் அமெரிக்கா முழுவதிலும் கில்லட் செய்த பிளேடுகள் மொத்தம் 90தான் விற்பனையாயின!

கில்லட் கம்பெனிக்கு முதல் போட்டவர்கள் தங்களுடைய பங்குகளை விற்கத் தலைப்பட்டார்கள். போட்டதில் பாதி பணம்கூட கிடைக்கவில்லை. ஒருநாள் மிகச்சோர்ந்த மனதுடன் கில்லட் உட்கார்ந்திருந்தபொழுது, சான் சாயுசு என்பவர் தற்செயலாக அந்தப்பக்கம் வந்தார். சாய்சு பெருத்த முதலாளி, ஒயின் வியாபாரத்தால் இலட்சக்கணக்கில் சம்பாதித்தவர். கில்லட்டின் கண்டுபிடிப்பு அவருடைய கவனத்தை ஈர்த்தது. பந்தயக்குதிரைமீது பணத்தை கட்டுவதுபோல, கில்லட்டுக்கு உதவிபுரிய சாய்சு முன்வந்து, 60 ஆயிரம் டாலர்களைக் கொடுத்துத் தொழிற்சாலையை விரிவுபடுத்தி, விற்பனையையும் ஊக்கப்படுத்த ஏராளமான விளம்பரங்கள் செய்தார். இந்தப் புதுமுயற்சியால், பிளேடுகள் விற்பனை உயர ஆரம்பித்தது. 1903-ல் 90 பிளேடுகள் விற்றதற்கு 1904-ல் 90,844 பிளேடுகள் விற்றன. அதற்கு அடுத்த ஆண்டு 2,76,577 பிளேடுகள் விற்பனையாயின! முதலில் அரைடாலர் மதிப்பிருந்த கில்லட் கம்பெனியின் பங்குகள் இப்பொழுது நூறு டாலர், நூற்றைம்பது டாலர் எனப்பங்கு மார்க்கட்டில் விலை உயர்ந்தது!

முதலில் "பைத்தியக்காரத் தனமாகக்" கருதப்பட்ட கில்லட் ரேசர்-பிளேடுகள் விலை போவதைப் பார்த்ததும், போட்டிக் கம்பெனிகள் ஏராளமாக உண்டாக ஆரம்பித்தன. 1903-ல் கில்லட் கம்பெனி ஒன்றுமட்டும் தத்தளித்துக் கொண்டிருந்ததுபோக, 1918ல் மொத்தம் 340 கம்பெனிகள சவர பிளேடுகள் தயாரிக்கும் போட்டியில் ஈடுபட்டிருந்தன.

சவர பிளேடுகளுக்கு ஆரம்ப காலத்தில் தரப்பட்ட விளம்பரங்களைப் பார்த்தால் வேடிக்கையாயிருக்கும். "தன்கையே தனக்குதவி! உங்கள் முகத்தை நீங்களே அழகு செய்யலாம்! இதோ! எங்கள் மார்க் பிளேடுகளைத் தவறுமல் வாங்குங்கள்!" இப்படி ஒரு விளம்பரம் வரும். "சவரக் கடைகளில் அமெரிக்காவில் உள்ளவர்கள் எல்லோரும் காத்துக் கொண்டிருப்பதால் வீணுகும் நேரம், உழைப்பு, பணம் இவற்றையெல்லாம் மிச்சப்படுத்தினுல்,பனமா கால்வாயை நான்கு மணிநேரத்தில் வெட்டி முடித்துவிடலாம்! ஆக, உங்கள் நேரம், உழைப்பு, பணம் மிச்சமாக எங்கள் பிளேடுகளை உபயோகப் படுத்துங்கள்!" மற்றொரு விளம்பரம் போதனை தரும். கில்லட் கம்பெனியார் தந்த விளம்பரம் இன்னும் வேடிக்கையானது. "வாசிங்டன் அமெரிக்கநாடுகளுக்கு விடுதலையை வாங்கித் தந்தார். கில்லட் அமெரிக்க மக்களுக்கு விடுதலை தருகிருர். ஒருவர் மற்றொருவரிடமபோய் சவரத்துக்காகக் காத்து நிற்கும் அடிமை நிலையிலிருந்து கில்லட்பிளேடு விடுதலை தருகிறது!"

ஆரம்பித்து மூன்று ஆண்டுகளுக்குள், கில்லட்கம்பெனியின் கிளைகள் இங்கிலாந்து, பிரான்சு, செர்மனி ஆசுத்திரியா, இத்தாலி, நார்வே, சுவீடன், முதலிய நாடுகளிலும் பரவின.

1914-18 சண்டையின் பொழுது கில்லட்டுக்கு ஒரு அபூர்வ யோசனை தோன்றியது. அமெரிக்க அரசாங்கத்துடன்பேச்சுவார்த்தை நடத்தி அமெரிக்கப் போர்வீரர்கள் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு கில்லட்ரேசர் அரசாங்கம் வாங்கித்தரும்படி செய்தார். அதனால் ஒரேசமயம் 42லட்சம் கில்லட்ரேசர் விற்கப்பட்டன! அந்த விற்பனையில் மற்றொரு அனுகூலம் எதிர்பார்த்துத் தான் கில்லட் அவ்வாறு செய்தார். சண்டை முடிந்து, போர் வீரர்கள் தங்கள் தங்கள் ஊருக்குத் திரும்பி போன பொழுது, ஒவ்வொருவர் கையிலும் கில்லட்ரேசர் இருந்தது. இதனால் ஏராளமான விளம்பரம் வந்து, பிளேடு விற்பனை இன்னும் உயர்ந்தது! இரண்டாவது உலகப்போருக்குப்பின் கில்லட் பிளேடுகளின் விற்பனை இரண்டுமடங்காக உயர்ந்தது!

1903-லிருந்து 1950க் குள்ளாக, கில்லட் ரேசர்கள் விற்பனையானவை சுமார் 25 கோடிக்குமேலிருக்குமாம். அந்தக்காலத்தில் விற்பனையான கில்லட் பிளேடுகள் 2500000000 (அதாவது 2500 கோடிக்கு) குறையாமலிருக்கும். கில்லட் கம்பெனி 1903லிருந்து 1948 வரை மொத்தம் 14 கோடி டாலர் லாபத்தைப் பங்குதாரர்களுக்குக் கொடுத்தது, ஆனால் கம்பெனியை ஆரம்பித்த கில்லட்டுக்கு அதிகப் பலன்கள் கிடைக்கவில்லை. தொழில் வளர வளர, அவருடைய கம்பெனி பங்குதாரர்கள் அவரிடமிருந்த பங்குகளை வாங்கிக்கொண்டு விட்டனர். கணக்கில் லாபம் வந்து குவிந்த போதிலும், கில்லட் 1932ல் இறக்கும்பொழுது கலிபோர்னியாவில் சில நிலங்கள், பழத்தோட்டங்கள் இருந்ததைத்தவிர அதிகமான சொத்துக்கள் கிடையாது. கில்லட் கம்பெனியுடன் கில்லட்டின் வாரிசுகளுக்கு எத்தகைய தொடர்பும் இல்லாது போயிற்று. கில்லட்டின் பங்குகளும், கில்லட்கம்பெனியின் நிர்வாகமும் லாபமும், 1903ல் எந்த முதலாளிகள் "பைத்தியக் காரத்தனம்" எனக் கில்லட்டைக் கேலி செய்து அனுப்பினர்களோ அந்த முதலாளிப் பரம்பரையினர்கள் கையில் போய் சேர்ந்துவிட்டன. ●

உடற்பயிற்சி ஆசிரியர் மிகக் கண்டிப்புடன் மாணவர்களைப் பழக்கிக் கொண்டிருந்தார்.

"இடது கால்!" என்று ஆசிரியர் சத்தங் கொடுத்தார்.

வரிசையில் நின்ற எல்லா மாணவர்களும் இடது கால்களை உயர்த்தி, வலது காலில் நின்றார்கள். மத்தியில் நின்ற ஒரு மாணவன் மட்டும் தவறுதலாக வலது காலை உயர்த்தினான்.

தூரத்திலிருந்து வரிசையைப் பார்த்த உடற்பயிற்சி ஆசிரியருக்கு கோபம் வந்து. எந்த முட்டாள் இரண்டு கால்களையும் உயர்த்தியிருக்கிறான்?" என்று கேட்டார்!

## மக்களுக்காகத் திட்டமா?

(5-ம் பக்கத் தொடர்ச்சி)

காரர்கள் அதிகப் பணக்காரர்களாயிருக்கின்றனர்.

ஐந்தாண்டுத் திட்டத்துக்காக நிதி தேவை, எனவே வரி உயர்த்தப்படுகிறது என நிதி மந்திரி கூறும் காரணத்தை அப்படியே ஒத்துக்கொண்டாலும், வரியை உயர்த்துவதன் மூலம் இவர் போட்ட திட்டத்தை நிறைவேற்ற முடியுமா என்பது சந்தேகமே! திடீரென போட்ட வரி உயர்வுகள் நாட்டின் பொருளாதாரத்தை எவ்வாறு சீரழிக்கிறது என்பதைப் பார்க்கலாம். ஐந்தாண்டுத் திட்டத்துக்காக வரி உயர்த்தப்படுகிறது; வரி உயர்வால் விலைவாசிகள் அதிகமாகின்றன; விலைகள் அதிகமானால் அன்றாட வாழ்க்கைச் செலவு உயர்கிறது; வாழ்க்கைச் செலவு உயர்வதால் வேலை பார்ப்பவர்களின் சம்பளமும் கூலியும் அதிகமாகும்; பொருள்களின் விலையும், கொடுக்கவேண்டிய கூலியும் உயர்ந்தால் திட்டங்களுக்கான செலவு உயரும்! ஆக 100 கோடி ரூபாய்க்குப் போடப்பட்ட திட்டம், மாறுதல் இல்லாமல் அப்படியே செய்து முடிக்கப்படவேண்டுமென்றால், வரி உயர்வுக்குப்பின், விலையும் கூலியும் உயர்வதால், 125 அல்லது 150 கோடி ரூபாயாக திட்டத்தின் செலவும் உயரும்!

உதாரணமாக முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் போடப்பட்ட தாமோதர் பள்ளத்தாக்குத் திட்டத்தைக்கவனித்தால் திட்டத்தின் செலவுகள் எப்படி வளர்ந்துகொண்டே போகின்றன என்பது தெரியும். 1951ல் தாமோதர் பள்ளத்தாக்குத் திட்டம் ஆரம்பிக்கப்பட்ட பொழுது, அரசாங்கம் போட்ட திட்டம் 77 கோடி ரூபாய். 1952ல் ஐந்தாண்டுத் திட்டக் குழு கூடி விலைவாசிகள் உயர்வுகாரணமாக அதிகமாகும் செலவுகளைக் கணக்கிட்டு, தாமோதர் பள்ளத்தாக்குத் திட்டத்தை 77 கோடியிலிருந்து 88 கோடிக்கு மாற்றியமைத்தது! பின் மாநில அரசாங்கங்களும், மத்திய அரசாங்கமும் அமைத்த நிபுணர்கள் குழு தாமோதர் பள்ளத்தாக்குத் திட்டத்துக்கான செலவுகளைப் பரிசீலனை செய்து 88 கோடியாக இருந்த திட்டத்தை 98 கோடியாக உயர்த்தியது! இவ்வாறு 1951ல் 77 கோடி செலவில் திட்டமிடப்பட்ட தாமோதர் பள்ளத்தாக்குத் திட்டம் 88 கோடியாகி, பின் அதுவும் போதாமல் 98 கோடியானது! திட்டத்தின் "வளர்ச்சி" - செலவு வகையில் அடைந்த வளர்ச்சி-அத்துடன் நிற்கவில்லை. தாமோதர் பள்ளத்தாக்குத் திட்டத்தை நிறைவேற்ற அமைக்கப்பட்ட குழுவினர் புதிய கணக்குகளைப் போட்டு, திட்டத்திற்கு மொத்தம் 103 கோடி தேவை என அறிவித்தார்கள்! பின்பு 1956ல் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தைத் தயாரித்த திட்டக் குழுவினர், முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் ஆரம்பிக்கப்பட்டு முடிக்கப்படாமல் இருக்கும் திட்டங்களைப் பரிசீலனை செய்யும் பொழுது தாமோதர் பள்ளத்தாக்குத் திட்டத்தைப் பரிசிலனை செய்து, அதை நான்கு பகுதிகளாக வகுத்து, மொத்தச் செலவை 110 கோடி ரூபாய்க்கு உயர்த்தினார்கள்.

முதல் ஐந்தாண்டுத் திட்ட ஆரம்பத்தில் போடப்பட்ட ஒரு திட்டம் மட்டும் எவ்வளவு உயர்ந்து விடுகிறது பாருங்கள்!

77 கோடி ரூபாய்!
88 கோடி ரூபாய்!
98 கோடி ரூபாய்!
103 கோடி ரூபாய்!
110 கோடி ரூபாய்!

இப்படியாக முதல் ஐந்தாண்டுத் திட்ட ஆரம்பத்தில் 77 கோடியாக இருந்தது இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட ஆரம்பத்தில் 110 கோடியாக உயர்ந்து விடுகிறது. போடப்படுகிற திட்டங்களை மேலும் மேலும் விரிவு படுத்துவதாலும், அவ்வப்பொழுது விலைவாசிகள் உயர்வதாலும், திட்டத்தின் தொகை வளர்ந்துகொண்டே போகிறது.

இப்பொழுதுகூட இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்துக்காக வரிகளை உயர்த்தினார்கள், ஆனால் இவர்கள் வரி விதித்து அதிகமாகப்பெறும் பணத்தைவிட அதிகமான அளவுக்கு திட்டத்தின் தொகை உயர்ந்துவிட்டது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் ஆரம்பத்தில் அரசாங்க பங்கில் 4800 கோடி ரூபாயாகவும், தனிப்பட்டோர் பங்கில் 1400 கோடியாகவும் இருந்தது. ஆனால் இப்பொழுது ஓராண்டு முடிவதற்குள் அரசாங்கத்தின் பங்காக இருந்த தொகை 4800 கோடியிலிருந்து 5600 கோடியாக உயர்ந்துள்ளது! முன் கூட்டியே சரியாக அறிந்து திட்டமிடாத காரணத்தால், திட்டத்தின் அளவு அடிக்கடி மாறுபடுகிறது, அதன்மேலும் திட்டத்தை நிறைவேற்ற அன்றாட வாழ்க்கைச் சாமான்கள் மீதும் சிமெண்ட் உருக்கு இவைகள் மீதும் வரிகளை உயர்த்தினால், திட்டத்தின் செலவு உயர்கிறது! மறுபடியும் திட்டத்தின் செலவு உயர்ந்து விட்டதால், வரிகளை உயர்த்தியாகவேண்டும்! இப்படி திட்டச் செலவுக்காக வரி உயரவும், வரி உயர்வதால் திட்டச் செலவு அதிகமாகவும் இப்படியாக சுற்று வளையத்தில் மேலே போய்க்கொண்டிருக்க வேண்டும். அதுவும் வெகு உயரத்துக்குப் போய்க்கொண்டேயிருக்க முடியாது. ஒரு நிலையில் திடீரென மக்களுடைய சக்திக்கும், உயர்ந்துகொண்டிருக்கும் வரியின் அளவுக்கும் உள்ள பிணைப்பு அறுந்துவிடும்! பின் சரிந்துவிழுகிற அட்டை வீடு போல, வரி உயர்வின்மீது போடப்படும் திட்டங்கள் விழுந்துவிடும்.

விலைகள் திடீரென உயர்வதால், மக்கள் வாழ்க்கை இன்னும் மோசமாகும். வாழ்க்கைச் செலவு உயர்ந்து, வருமானம் குறைந்தோ, அல்லது வாழ்க்கைச்செலவு உயர்ந்த அளவுக்கு வருமானம் உயராமலோ இருந்தால், வாழ்க்கைத் தரம் குறையும், உணவுச் சத்து குறையும். இதனால் உழைப்பு குறைய, வருவாயும் குறையும், வாழ்க்கை இன்னும் மோசமாகும். ஏழை இன்னும் அதிக ஏழையாவான், ஏழ்மை அதிகரிக்க, தொத்துநோய் பரவும், இல்லாதவர்கள் நாட்டுக்குப் "பொல்லாதவர்களாக" ஆவார்கள், பணம் படைத்த பொல்லாதவர்கள் அரசாங்கத்துக்கு "நல்லவர்களாக" ஆகிவிடுவார்கள். நாட்டில் பொருளாதாரச் சீரழிவு உண்டாகி, பணக்காரனுக்கும் ஏழைக்கும் இடையில் இருக்கும் ஏற்றத்தாழ்வு இன்னும் அதிகமாகி, நாடு காடாகும்!

நாட்டின் நலிவைப் போக்க நிதித் திட்டங்களைத் தீட்டுவதை விட்டு, இருக்கும் நலிவை அதிகமாக்கும் விதத்தில் காங்கிரசு அரசாங்கம் நிதித் திட்டத்தைத் தருகிறது. துயர்கள், நலிவுகள், தொத்து நோய் ஏழ்மை, பணக்காரர் தொல்லை, இவைகள் தொடர்ந் தடிக்கும் சூறையில் "வரியோ வரி!" என நிதி மந்திரியார் வரிகளை வீசியபடி இருக்கிறார்! ஐயோகோ, எவ்வளவு வரிச் சுமைகளைத்தான் நாடு தாங்கிக் கொள்ளும்!

ஐந்தாண்டுத் திட்டங்களைப் பற்றி மக்களிடம் பிரசாரம் செய்தபொழுதெல்லாம், மக்களின்மீது விழக்கூடிய வரிப் பளுவைப்பற்றி அவர்கள் எதுவும் கூறவேயில்லை. அமெரிக்கா உதவிபுரிகிறது, கானடா கனிவுடன் வருகிறது, உலக பாங்க் கடன் தர ஒத்துக்கொண்டுள்ளது, காமன்வெல்த் நாடுகள் ஆதரவு தருகின்றன, கொழும்புத் திட்டத்தில் இந்தியாவுக்கு ஒத்தாசை தரப்படும், இவ்வாறு வெளிநாடுகளிலிருந்து கிடைக்கக்கூடிய உதவிகள் தாம் அதிகமாக மக்கள் முன் பேசப்பட்டன். "அமெரிக்காவோ, உருசியாவோ, யார் உதவி தந்தாலும் இந்தியா ஏற்றுக்கொள்ளத் தயார். ஆனால் பொருளாதார உதவிக்குப்பின் அரசியல் நிபந்தனைகள் எதுவும் இருக்கக்கூடாது" என பண்டித நேருவும் அவர் பக்க மந்திரிகளும் கூறிய பொழுதெல்லாம், இந்தியாவுக்கு உதவி ஏராளமாக வெளியில் காத்துக்கிடப்பது போலவும், அதை எந்த நிபந்தனைகளுடன் அனுமதிப்பது என்பதில்தான் யோசனை இருப்பது போலவும் மக்களுக்குப்பட்டது. திட்டத்தைப் போட்டுவிட்டு, நிறைவேற்றப் பணம் தேடிக் கடைசியாக மக்களின்மீது பாரத்தைப் போட்டுவிட்டார்கள். இவ்வளவும் தெரிந்திருந்தால், தெரியாத எதிர்காலத்தில், வரப்போகாத பலன்களுக்காக புரியாத புள்ளிவிவரங்களை மக்கள் சற்று உன்னிப்போடு கவனித்திருப்பார்கள்.

ஆனால் திட்டங்களைப்பற்றி அழகுறப் பேசிவிட்டு, தேர்தல் முடிந்து பதவியேற்றதும் தாளாத சுமையை, மாளாத வரிகளை மக்களின்மீது காங்கிரசு அரசாங்கம் வீசிவிட்டது. குல்லாயை வைத்துக்கொண்டு கிடைத்தவன் தலையை உருட்டுவதுபோல, ஏட்டிலே பெரிய திட்டங்களைப் போட்டுக்கொண்டு, நாட்டு மக்கள் தலையில் கைவைக்கிறார்கள். ஏழைகளின் வயிற்றிலடிக்கிறார்கள், வாழ்வை சோகமயமாக்குகிறார்கள்!

தாங்கக்கூடிய இடத்தில் வரியைப் போடட்டும். ஏழைகளை வாட்டி வதைக்கவேண்டாம்!

நாட்டுக்காகத் திட்டத்தை நிறைவேற்றட்டும், திட்டத்துக்காக நாட்டை சுடுகாடாக்க வேண்டாம்!

பலன்பெறும் பகுதியிலே பணத்தைப் பெறட்டும், போடப்பட்ட திட்டங்களினால் பலன் காணு மக்களிடம் வரி கேட்டு அவர்கள் வாழ்வை மேலும் பாழ்செய்யவேண்டாம்!

---

சேலம் தொகுதி
தேர்தல் வழக்கு நிதிக் கூட்டம்!

**2-6-57 ஞாயிறு காலை 9 மணிக்கு**
**சென்னை கோகலே மண்டபத்தில்**

தலைவர்: **எஸ். நாராயணன்,** எம். ஏ.

பேச்சாளர்கள்:

# இரா. நெடுஞ்செழியன்
# மு. கருணாநிதி

நன்கொடை: ரூ. 1. அணா 8.

தி. மு. க. மாநில மாணவர் கிளை.

குறிப்பு: நன்கொடை டிக்கட்டுகள் அறிவகத்தில் கிடைக்கும்.

---



59

# இந்திய அரசியல் நிலை!

ஆ. அந்தி சார்லிஸ்வைமின்

**ழைய கால மன்னர்களின் கொலுமண்டபம்போல, டில்லி அரசியல் இருக்கிறது!**

**பிரதம மந்திரி பதவியைவிட்டு நேரு விலகினால், அது நாட்டுக்கும் நல்லது, அவருக்கும் நல்லது!**

**ரே கட்சி நீடித்து ஆட்சியைக் கைப்பற்றுவது, ஜனநாயகத்துக்கு நல்லதல்ல!**

—"மான்செஸ்டர் கார்டியன்" தரும் மதிப்பீடு.

வெளிநாட்டுப் பத்திரிக்கைகள் பொதுவாக பண்டித நேருவைப் பாராட்டியும், அவருடைய ஆட்சிப்போக்கை ஆதரித்துமே எழுதிவருகின்றன. அதிலும் பிரிட்டிஷ் பத்திரிக்கைகள் பண்டித நேருவைச் சமயங்கிடைத்தபோதெல்லாம் பாராட்டிப் புகழுரைச் சூட்டத் தவறுவதில்லை. அதற்கு முக்கிய காரணம், இங்கிலாந்துக்கும் இந்தியாவுக்குமிடையே இருந்த மாச்சரியங்கள் மறையவேண்டுமென்பதும், இந்தியாவின் நேசம் இங்கிலாந்துக்கு இருக்கவேண்டுமென்பதும், காமன்வெல்த் அமைப்பில் இந்தியா நீடிக்கவேண்டுமென்பதும் ஆகும். பண்டிதநேரு என்றால் மிகப்பக்குவமாக நடந்துகொள்ளும் பத்திரிக்கைகள்கூட, ஓரோர்சமயம் அவருடைய குற்றங்குறைகளைக் கூறுகின்றன, தவிர்க்கமுடியாத காரணத்தால்.

"மான்செஸ்டர் கார்டியன்" என்ற ஆங்கில செய்தித்தாள், தொழிற்கட்சியைச் சார்ந்து இருக்கும் பத்திரிக்கையாகும். அது அண்மையில் தீட்டிய தலையங்கமொன்றில், பண்டிதநேரு நீடித்துப் பல்லாண்டுகளாகப் பிரதம மந்திரியாக இருப்பதைத் தவிர்த்து, பதவிவிட்டு விலகினால், அது இந்திய நாட்டுக்கும் நல்லது, அவருக்கும் நல்லது எனக்கூறியிருக்கிறது. அந்தத் தலையங்கத்தின் முக்கியமான பகுதிகள் கீழே மொழிபெயர்த்துத் தரப்பட்டுள்ளன:—

"நேரு எடுக்கும் முடிவுகளில் முன்பிருந்த தெளிவும் உறுதியும் வரவரச் சற்று குறைந்து வருகின்றன. அவைகளில் அவர் நிச்சயமாக இருப்பதாகக் கூறமுடியவில்லை.

இந்த அறிகுறிகள் கவலைக்கிடமானவை. தற்பொழுது குறைவாக இருந்தபோதிலும், காலப்போக்கில் அவைகள் வளர்ந்து பாரம் அதிகமாகும். முக்கியமாக அண்மையில் மூன்று முடிவுகளில் அவர் தெளிவுடன் இருக்கவில்லை. அந்தச் சமயங்களில் பிரச்சினையை அணுகுவதில் கோபத்துடனும் உணர்ச்சி வயப்பட்டும் அவர் இருந்திருக்கிறார்,

சென்ற ஆண்டு மாநிலச் சீரமைப்பின்போது, எல்லையை அமைப்பதில் அவருடைய தடுமாற்றமும் மத்திய அரசாங்கத்தின் தயக்கமும் பம்பாய்க் கலவரங்களை உண்டாக்கின.

ஹங்கேரிக் கலகங்களின்போது, நிலைமையை அவர் சரியாகப் புரிந்துகொள்ளவில்லை.

காசுமீர் பிரச்சினையில், அரசியல் நல்ல தன்மையிலும் நீண்டகால கண்ணோட்டத்திலும் அவர் நல்ல முடிவைத் தருவார் எனப் பலர் எதிர்பார்த்தது ஏமாற்றமடைந்தது.

பத்து ஆண்டுகளாக அவர் நீடித்து இந்தியப் பிரதம மந்திரியாக இருந்திருக்கிறார். அவருடன் போட்டியிட்டவர்களும், ஒத்துப் போனவர்களும்-சிலர் அரசியல் வாழ்விலிருந்து விலகிவிட, சிலர் இறந்துவிட, மற்றவர்கள் பின்னுக்குத் தள்ளிவிடப்பட்டு மறைந்துவிட, அவர்களைத் தாண்டி நேரு தனித்து உயர்ந்து விளங்குகிறார். அவர் அதிகம் கண்டும் கேட்டும் இருக்கின்ற காரணத்தால், அவருடைய ஆலோசகர்கள் அவருக்குப் பிடிக்காத விஷயங்களை அவருக்குத் தெரியப்படுத்தத் தயங்குகிறார்கள். இவ்வளவு நீடித்த அளவில் பதவியில் இருக்கின்ற காரணத்தால், அவரைப் பின்பற்றுபவர்களிடை ஒருவிதமான போட்டி—நேருவிடம் ஏதாவது ஒன்றைச் சொல்வதுயார் என்பதில் கடுமையான போட்டி ஏற்பட்டு வருகிறது. புதுடில்லியில் இருக்கிற அரசியல் நிலை 18-ம் நூற்றாண்டு ஐரோப்பிய மன்னர்களின் அரண்மனையில் காணப்பட்ட நிலைமையுடன், இந்திய மகாராஜாக்களின் கொலுமண்டபங்களில் இருந்த நிலைமையுடன் ஒத்து வருகிறது.

ஜனநாயகத்தில் ஒரு பிரதம மந்திரிக்கு எவ்வளவுதான் நல்ல எண்ணமிருந்தபோதிலும், மிக நீண்டகாலத்துக்குப் பிரதம மந்திரியின் மாளிகையிலேயே தொடர்ந்து இருக்க நேரிட்டுவிட்டால், பொதுமக்களின் மனப்போக்கை அறிந்துகொள்வது கடினமாகி விடும். எதிர் தரப்பில் இருந்தாலாவது ஒரு முறையில் மனப்போக்கு மாறுதலடைவதற்கான வாய்ப்பு நேருவுக்குக் கிடைத்திருக்கும், அப்படியில்லாவிட்டால் சிறிதுகாலம் பதவியிலிருந்து விலகி சற்றுத் தூர நின்று அமைதியுடன் கவனித்து ஆராய்ந்து பார்த்தாலும், அது நன்மை பயப்பதாக இருக்கும். நேரு தாங்குகிற கடினமான சுமையைப் பார்க்கும்பொழுது, ஒரே கட்சிமட்டும் நீண்டகாலமாக ஆட்சியை தன்னுடைய கட்டுப்பாட்டில் வைத்துக்கொள்வது நாட்டுக்கு எவ்வளவு துரதிர்ஷ்டவசமானது என்பது தெரிகிறது.

அத்தகைய ஆட்சிமுறை எதேச்சாதிகார முறைக்குத்தான் போகவேண்டுமென்பதில்லை எனச் சிலர் கூறுவார்கள். அரசியல் கட்சிகளிடை இருக்கவேண்டிய போட்டிக்குப் பதிலாக, ஆளுங்கட்சிக்குள்ளேயே பிரிவுகள் தோன்றி போட்டிகள் உண்டாகலாம். நேருவின் கட்சியைப் பொறுத்தவரை இது ஓரளவுக்குத்தான் உண்மை. மிக நீண்டகாலத்துக்கு ஒருவரையே பிரதம மந்திரியாக தொடர்ந்து வைத்துக்கொள்ளும் முறையானது, எப்படிப்பட்டதாயிருந்தாலும், நாட்டுக்கு நல்லதல்ல; அந்தப் பிரதம மந்திரிக்கும் நல்லதல்ல!

ஜனநாயக நம்பிக்கைக் கொண்ட நன்பர்களுக்கு ஏமாற்றத்தைத் தரும் வகையில் நேரு ஏன் நடந்துகொள்கிறார்? அது ஒருசமயம், பிரச்சினைகளை வேண்டுமென்றே சிறிதாக்கும் அவருடைய பண்பிலிருந்து உண்டானதாக இருக்கலாம், பிரச்சினையின் முழுவிவரங்களையும் பலமுனைகளிலிருந்தும் பார்த்தால் சிக்கல் அதிகமாகி செயல்படும் திறன் குறைந்துவிடுமென்று நேரு நினைக்கிறார்.

ஆகையால் ஒரு குறிப்பிட்ட பிரச்சினையில் ஓரிரண்டு அம்சங்களில்மட்டும் கவனத்தைச் செலுத்தி, முடிவுகாண நேரு முயலுகிறார். அதனால் என்ன நேருகிறதென்றால், அவர் எடுத்துக்கொண்ட அம்சங்களை மட்டும் வைத்துப்பார்த்தால் அவருடைய முடிவு சரியானதாகத் தோன்றும், ஆனால் பிரச்சினையை முழுவதும் கவனித்தால் அந்த முடிவு சரியானதாக இருக்காது." ○

---

# வளரும் மக்கட்தொகை!

**உலகில் ஒவ்வொரு விநாடியிலும் (நிமிடத்திலும்) 170 குழந்தைகள் தோன்றிக்கொண்டே இருக்கின்றன; அதே விநாடியில் 90 பேர்கள் மடிந்து மறைந்துகொண்டேயிருக்கின்றனர்!**

இன்றைய நிலையில் உலகத்தவரின் மொத்த எண்ணிக்கை 270,00,00,000 என்று கணக்கிட்டிருக்கிறார்கள். ஒவ்வொரு நாளும் ஏறத்தாழ 1,20,000பேர்கள் உலக எண்ணிக்கையோடு கூட்டப்படுகிறார்கள். இந்த அளவில் உலக எண்ணிக்கை பெருகிக்கோண்டே போகுமேயானால், இந்த நூற்றாண்டின் இறுதியில் இப்பொழுது இருப்பதைப்போன்று இரண்டு மடங்கு எண்ணிக்கையுள்ளவர்கள் உலகில் நடமாடுவார்கள்.

மக்கள் எண்ணிக்கை இப்படி விரைவாகப் பெருகிக்கொண்டே போவதற்குக் காரணம், உலக மக்கள் நீண்ட நாட்களுக்கு வாழக் கற்றுக்கொண்டிருப்பதேயாகும். நோய்களையும், நோய்க் கிருமிகளையும் அழிக்கும் வகையில் மருத்துவத் துறையிலும், பொதுநலத் துறையிலும் திறமையும், முன்னேற்றமும் வளர்ந்திருப்பது, மக்களை முன்கூட்டியே சாகவிடுவதில்லை. நெதர்லாந்தில் சராசரி வாழ்க்கை வயது 70 ஆகும். இந்தியாவில் அது 34 ஆகத்தான் இருந்துவருகிறது.

ஆண்டுதோறும் ஆசியாக் கண்டந்தான் ஏனைய கண்டங்களைக் காட்டிலும், மிகவான மக்களை ஈன்றெடுக்கிறது. ஒவ்வொரு ஆண்டும் 2,40,00,000 மக்கள் ஆசியாக் கண்டத்தால் உலக எண்ணிக்கையோடுகூட சேர்க்கப்படுகிறார்கள். இப்பொழுது மொத்த உலக எண்ணிக்கையில் பாதிக்குமேல் ஆசியாக் கண்டத்தில்தான் இருக்கிறார்கள்.

உலகநாடுகளில் சீனாவிலும், இந்தியாவிலும்தான் மிகவான மக்கட்தொகை காணப்படுகிறது. சீனாவின் எண்ணிக்கை 58,26,03,417-ம், இந்தியாவின் எண்ணிக்கை 35,68,79,394-ம் ஆகும்.

இந்தியத் துணைக்கண்டத்தில் மட்டும் சுமார் 800 மொழிகள் பேசப்படுகின்றன.

இந்தியத் துணைக் கண்டத்தில் 100–க்கு 85 பேர்கள் இந்துக்களாகவும், 10 பேர்கள் முசிலிம்களாகவும், மீதி 5 பேர்கள் சீக்கியர்கள், கிருத்தவர், ஜைனர்கள், பிறசமயத்தார்களாகவும், இருந்து வருகின்றனர். பாக்கிச்தானில் 100க்கு 85 பேர்கள் முசிலிம்களாகவும், 13 பேர்கள் இந்துக்களாகவும், பிறர் பிற சமயத்தினராகவும் இருந்து வருகின்றனர்.

பிசித்தீவில் மற்ற நாட்டைச் சேர்ந்த மக்களைக் காட்டிலும் அங்குக் குடியேறியுள்ள இந்தியர்களின் எண்ணிக்கைதான் மிகவாகும். தாய்லாந்தில் 35சதவிகிதத்தினரும், பிரிட்டிஷ் கயானாவில் 40 சதவிகிதத்தினரும் இந்தியமக்களாவார்கள். ○

# சேரிகள் திருந்த!

சேரி வாழ்வோர் நிலை பற்றிப் பேச சில நாட்களுக்கு முன் பம்பாயில் ஒரு மாநாடு கூட்டப்பட்டது. இதுபோலப் பல மாநாடுகளும் காகிதத்தீர்மானங்களும், நடத்திருக்கின்றன! திட்டவட்டமான முடிவுகளும் இதற்கு முன் எடுக்கப்படாமலில்லை. சென்னையை எடுத்துக்கொண்டால், சென்னை நகர மன்றத்திற்கு வருகிற ஒவ்வொரு புதுமேயரும் ஆரம்பப் பேச்சில் சேரிகளைத் திருத்தி அமைக்கப் போவதாக அறிவிக்கிறார்கள். அவர்கள் தரும் உறுதியான பேச்சு சேரிவாழ்வோர்களிடை புதிய நம்பிக்கையை உண்டாக்கும். ஆனால் அந்த மேயர் காலத்தில் இருக்கும் சேரிகளில் எந்தவித மாறுதலும் வராது. குப்பை கூளங்கள், குனிந்துசெல்லும் வழிகள் சாக்கடை ஓரங்கள், அவற்றில் புரண்டு எழுந்து ஓடும் குழந்தைகள், பாதையில் அடுப்பை மூட்டி, காற்றைத் தட்டியால் மறைத்து, கஞ்சி காய்ச்சும் தாய்மார்கள், பதுக்கிவைத்த சாராயத்தை போட்டுக்கொண்டு பாட்டுப்பாடி திரும்பி வரும் "குடி" மக்கள்—இவைகள் சேரியை விட்டு நீங்காது இருக்கும். ஆண்டுதோறும் சேரிகளின் எண்ணிக்கை அதிகமானபடி இருக்கின்றது; ஒவ்வொரு சேரியிலும் உள்ள நெருக்கடியும் அதிகமானபடி இருக்கிறது.

சென்னை நகரத்தில் வருகின்ற மேயர்கள் வேண்டுமென்று நம்பிக்கை தந்து ஏமாற்றுகிறார்கள் என்று கூறிவிட முடியாது. சென்னை நகரத்தை நினைத்தால் சிதறிக் கிடக்கும் நூற்றுக்கணக்கான சேரிகள் அவர்களின் கவனத்திற்கு வரத்தான் செய்கிறது. நகரத்தின் பரிபாலனத்தை நினைக்கும்பொழுது சேரிகளைத் திருத்தியமைக்க வேண்டுமென்ற உண்மையான எண்ணமும், ஆவலும் வருகின்றன. ஆனால் அவர்களால் செய்ய முடியவில்லை. ஆக அடுத்த மேயர் வந்ததும் முன்பிருந்த வரைப்போல நல்ல உறுதியுடன் துவங்கி எதுவும் செய்யாதநிலையில்விட்டுச்செல்கிறார். அவர்கள்மீது குறை சொல்லவில்லை, காரணம் அந்த குறைகளை நீக்கும் வலிவு—பொருளாதார வசதி சென்னை நகர மன்றத்துக்கோ, தனிப்பட்ட குழுவினருக்கோ கிடையாது. அது மாநில அரசாங்கத்தால்கூட முடியக்கூடிய காரியம் அல்ல. மத்திய அரசாங்கம் முயன்றால் மட்டுமே முடியக்கூடிய காரியம். சேரிகளைத் திருத்தியமைக்க சேரி வாழ்வோருக்கு வாழ்வு தர பெரும் நிதித்திட்டங்கள் தேவை. இன்றுள்ள நிலையில் மக்களின் வரிப்பணத்தில் பெரும்பகுதி மத்திய அரசாங்கம் தட்டிக்கொண்டுபோய் விடுகிற காரணத்தால், இங்கு ஏதாவது வேண்டுமென்றாலும் டில்லிசர்க்காரிடம் கூறித்தான் பெறவேண்டியிருக்கிறது.

சேரிவாழ்வினரின் அவலநிலை பொருளாதார பிரச்சினையை மட்டும் அடிப்படையாகக் கொண்டதல்ல. சமுதாயத்தில் தாழ்த்தப்பட்ட நிலை வேறு இருக்கிறது! பெரும்பாலும் சேரிப்புறங்களில் ஒதுக்கப்பட்டவர்களும், தாழ்த்தப்பட்டவர்கள் மட்டுமே வாழ்வதை-வாழ்ந்து மடிவதைக் காண்கிறோம். பொருளாதார அநீதியுடன், சமுதாயத்தில் அவர்களுக்கு இழைக்கப்பட்டுள்ள அநீதியையும் அகற்ற வேண்டும்.

## சேலம் தேர்தல் வழக்கு நிதி!

10-5-57 பொதுக் கூட்டத்தில் சென்னை-மயிலை அப்துல் மாசித் படிப்பகத்தோழர்கள் ரூ. 2-16.

24-5-57 ஏற்காடு தொகுதிக் கூட்டங்களில் தோழர் எம். பி. சுப்பிரமணியம் அவர்கள் மூலம் ரூ. 15-12.

25-5-57 ஏற்காடு தொகுதிக் கூட்டங்களில் ரூ. 16-26.

26-5-57 திருப்பூர் சிறப்புக் கூட்டத்தில்: திருப்பூர் நகர தி. மு. கழகம் ரூ. 309-77; தோழர் பெத்தாம் பாளையம் பழனிச்சாமி அவர்கள் ரூ. 51-00.

26-5-57 குனியமுத்தூர் பொதுக்கூட்டத்தில் கோடிக்கால் விவசாயச்சங்கம் ரூ. 5-00.

மணியார்டர் மூலம் வரப்பெற்றவை: 12-5-57 உப்பட்டி தி. மு. க. பொதுக்கூட்டத்தில் திரட்டியது ரூ. 5-00 நீலகிரி லவ்டேல் எச். ஏ. சலாலுதீன் ரூ. 2-00. காஞ்சிபுரம் தோழர் எம். கே. தணிகாசலம் அவர்கள் மூலம் பல நண்பர்கள் ரூ. 24-00.

நிதி அனுப்பவேண்டிய முகவரி:

**இரா. நெடுஞ்செழியன்,**

26, நைனியப்பன் தெரு, மண்ணடி, சென்னை—1.

நிதித்திட்டத்தைச்சமர்பித்த கனம் கிருஷ்ணமாச்சாரியாரால் கூட சேரிகளைப் புறக்கணிக்க முடியவில்லை. அவருடைய பேச்சில் "குறைந்த வருமானமுள்ளவர்கள் குடியிருக்குமிடங்களும், அங்கு இருக்கும் சுகாதார நிலைமைகளும் மிக மோசமானவை; நமது நகரங்களில் இருக்கும் சேரிகள் எந்தவித நாகரிக வாழ்வுக்கும் அவமான சின்னங்களாகும்." என்று விளக்கினாரே தவிர, சேரிகளைச் சீர்திருத்தி அமைக்க, சேரி வாழ்வோரை உயர்த்திவிட எத்தகைய வழிகளையும் அவர் வகுக்கவில்லை.

நகரங்களை அழகுபடுத்துவதற்காகத் திட்டங்கள் யோசிக்கப்படுகின்றன. ஆனால் சேரிகளை திருத்தியமைப்பதற்கான உருவான திட்டங்கள் இதுவரை தரப்படவில்லை, செயல்படுத்தப்படவில்லை.

சில சமயங்களில் சேரிகளை அகற்றிவிடுகிறார்கள். ஒரு இடத்தில், நகரத்தின் அழகைக் கெடுக்கும் விதத்தில் ஒரு சேரி இருக்கிறதென்றால், அந்தச் சேரியைக் கலைத்து, ஊருக்கு வெளியில் ஒரு இடத்தைக்காட்டி, அவர்களைப் போகச் செய்கிறார்கள். ஆனால் அந்த சேரியில் இருந்தவர்கள். வேலை செய்யுமிடங்கள் பழைய சேரிக்குப் பக்கத்திலேயே இருக்கும். எனவே முதலிலிருந்த ஒரு சேரி கலைக்கப்பட்டால், அதற்குப் பக்கத்தில் கிடைத்த இடங்களிலெல்லாம் குடியேற்றம் நடைபெற்று, ஒரு சேரி இருந்தது போக, பத்து சேரிகள் உண்டாகி விடும்.

சேரி ஒழிப்பு மாநாடு பம்பாயில் நடைப்பெற்றது. அதற்கு பண்டித நேரு நல்வாழ்த்துச் செய்திகள் அனுப்பியிருந்தார். ஆனால் அவர் தீட்டுகின்ற ஐந்தாண்டுத் திட்டத்திலோ, தரப்பட்ட 1957-58 வரவு செலவுத் திட்டத்திலோ சேரி ஒழிப்புக்கு நல்ல செய்திகள் இல்லை. மாறாக, சிமெண்டுக்கும், இரும்புக்கும் வரி போட்டு அந்த விலைகள் உயர்வதால், புதுக் கட்டிடங்கள் உருவாவது தடுக்கப்பட்டு, ஓரிரு சேரிகள் திருத்தப்படும் சிறு முயற்சிகள் கூ[...] கைவிடப்படும்! வரிக் கொ[...]மையால், விலைகள்உயர்வதா[...] அதிகமாகத் துன்பப்ப[...] போகிறவர்கள் சேரி மக்களே[...]

சேரி ஒழிப்பு பெரியதொ[...] திட்டமாகக் கொண்டு நி[...] வேற்றப்பட வேண்டும். தெ[...]னாட்டில் நிறைவேற்ற என்[...] திட்டங்களிருக்கின்றன என[...] சிலர் கேட்பார்கள். சேரி ஒழி[...]புத் திட்டத்தை ஒன்றை ம[...]டுங்கூட வெற்றிகரமாக நி[...] வேற்றிவைக்க எவ்வள[...] பணம் கொடுத்தாலு[...] போதாது. நலிவுகள் ஏரா[...]மாக இருக்கின்றன. அதை[...] போக்க, அரசாங்கம் நம்[...]மில்லை! அரசாங்கம் நம்முடை[...] அரசாங்கமாக இல்லா[...] காரணத்தால்-இந்த நாட்டு[...]கான அரசாங்கம் இந்தநாட்டி[...] இல்லாத காரணத்தால், இ[...]குள்ள சேரிகள்-சேரிவா[...]வோர் நலிவுகள் தீர்வதில்[...] அரசாங்கம் நம்முடையதாகு[...] நலிவுகள் தீரும், சேரிக[...] நகர்களாகும், அங்கு இருப்[...]ரின் வாழ்வு செம்மையுறும்!

(2-ம்பக்கத் தொடர்ச்சி)

தெரிவிக்கப்பட்டபொழு[...] அவர்களுக்கு குழந்தைக[...] அலவன்சு என்று சில சலு[...]கள் தருவதாக நிதி மந்[...] தருகிறார். வரியை முத[...] விதிப்பானேன்? பின் அ[...] சலுகைகள் தருவானேன்?

அதிலும் குழந்தைக[...] இருப்பவர்களுக்கு அலவ[...] தருவதாகக் கூறுவதில் அ[...] தமிருப்பதாகத் தெரியவில்[...] மக்கள் தொகை அளவுக்[...]மீறி பெருகி வருவதை[...] தடுக்க, குடும்பக் கட்டுப்[...] பிரசாரங்களை இந்த அரசா[...]கம் செய்கிறது. அதற்கு ல[...] சக்கணக்கில் பணம் ஒதுக்[...] குழந்தைகள் பெருமலிரு[...] பதற்கான வழிவகைகளை[...] சொல்லித்தருகிறது. மற்றொ[...] பக்கத்தில் அதே அரசாங்[...] "குழந்தைகள் இருந்தா[...] அலவன்சு" தருவதாகக் கூ[...] குழந்தைகள் இருக்கும் கு[...] பங்களுக்குத் தனிச் சலு[...]கள் தருகிறது!



"மன்றம்" அச்சகத்தில் (26, நைனியப்பன் தெரு, மண்ணடி சென்னை-1. தமிழ்நாடு) ஆசிரியர், இரா. நெடுஞ்செழியன், எம். [...]
அவர்களால் அச்சிடப்பட்டு வெளியிடப்படுகிறது. உதவி ஆசிரியர்: இரா. செழியன் எம். ஏ. [...] தொலைபேசி எண்: 5569

